

# குழந்தை காரணமில்லாமல் அழும்பொழுது

அவனுக்கு அதிக உணவினாலோ அல்லது ஜீரணக் கோளாறினாலோ வயிற்றில் ஏற்பட்டிருக்கும் சங்கடத்தைத் தெரிவிக்கிறான். அவனுக்கு வயிறு ஒப்புசம் அல்லது வலியிலிருந்து சாந்தமேற்படுவதற்கும் அவஸ்தை ஜாஸ்தியாகாமல் தடுப்பதற்கும் ஐ. டி. எல். கிரைப் சிரப் தேவையாய் இருக்கிறது. அது ஒருவிதமான கெடுதலும் செய்யாது. நீங்கள் பத்திரமாய்

## அவனுக்கு கிரைப் சிரப் கொடுங்கள்




இது ஒரு மைசூர் கவர்ன்மெண்ட் தயாரிப்பு

GU-K. 2. T. M.

# குழந்தைகளின் ஈரல் குலைக் கட்டி வியாதிகளுக்கு ஜம்மியின் "லிவர்க்யூர்"

●

சென்னை ஜம்மி வெங்கட்ரமணய்யாவின் குமாரர், ஈரல் குலைக் கட்டி நிபுணர், கீழ்க் கண்ட இடங்களுக்கு விஜயம் செய்கிறார். அது சமயம் குழந்தைகளின் ஈரல் குலைக் கட்டி சம்பந்தமான எல்லா வியாதிகளையும் நேரில் காண்பித்து அவரிடம் யோசனைகள் கேட்டுக் கொள்ளலாம்.

**திண்டிவனம் : 13-2-45**

மாலை 2 மணி முதல் 6 மணி வரை

மெஸர்ஸ். சுந்தரா & கோ, கெமிஸ்ட்ஸ்.

**விழுப்புரம் : 14-2-45**

காலை 9 மணி முதல் 11 மணி வரை
மாலை 2 மணி முதல் 5 மணி வரை

C. குபேந்திர செட்டி
ஜெனரல் மர்ச்சண்ட், பஜார் ரோடு.

**கடலூர் : 15-2-45**

காலை 9 மணி முதல் 12 மணி வரை
மாலை 3 மணி முதல் 6 மணி வரை

மெஸர்ஸ். கமலா & கோ, கெமிஸ்ட்ஸ், புதுப்பாளையம்.

**சிதம்பரம் : 16-2-45**

காலை 9 மணி முதல் 12 மணி வரை
மாலை 3 மணி முதல் 6 மணி வரை

மெஸர்ஸ். ஸ்ரீ நடராஜா டிஸ்பென்ஸரி.

●

ஜம்மி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்
மயிலாப்பூர் :: சென்னை

# கல்கி பொருளடக்கம்

மலர் 4 } இதழ் 27 } 1945 பிப்ரவரி 11 { தாரண ௵ { தை 29


| | | |
|---|---|---|
| என்ன சேதி? | — | 7 |
| நிகழ்ச்சிச் சித்திரம் | உம்மன் | 8 |
| அலை ஓயாது! பஸ் நிற்காது! | ... | 10 |
| எட்டயபுரத்தில் எதற்கு? | ... | 14 |
| தஞ்சாவூர் நாணு கச்சேரி | இசைத்தேனீ | 15 |
| ஜிந்தாபாத் மகாநாடு | சாவி | 16 |
| சிவகாமியின் சபதம் | கல்கி | 19 |
| பார்த்தசாரதி | ராஜாஜி | 26 |
| கர்நாடக சங்கீத வித்வான்கள் | வைத்தியநாத பாகவதர் | 28 |
| அதுவும் இல்லையா? | ஸோமாஸ் | 29 |
| தேவியின் சிலை | கி. கா. கிருஷ்ணமூர்த்தி | 31 |
| யாருக்குப் பரிசு? | ராஜு | 37 |
| பாப்பா மலர் | மாலு | 38 |
| பாரதியார் ஞாபகார்த்த நிதி | ... | 41 |
| சமரஸக் கீர்த்தனைகள் | சுத்தானந்த பாரதி | 45 |
| தியாக புருஷர் | பகீரதன் | 46 |
| விசித்திர மாப்பிள்ளைகள் | நீலா | 47 |
| நடுக் காட்டில் துக்கச் செய்தி | டி. கே. சி. | 49 |
| ரோஜாப்பூ | என். சூரியமூர்த்தி | 50 |
| காலக்ஷேபம் | ... | 51 |
| சமாதானம் வருகிறது! | நாடோடி | 52 |




ஸ்ரீ திருமல ராவ் அவர்களை வாழ்த்துகிறோம்.

இராஜாங்க சபைத் தேர்தலில் அவர் அடைந்த சிறந்த வெற்றியைப் பாராட்டுகிறோம்.

அவரைத் தேர்ந்தெடுத்த இராஜாங்க சபை வோட்டர்களுக்கு நன்றி கூறுகிறோம்.

சென்னை மாகாண மக்கள், ஏழை — பணக்காரர் என்ற வித்தியாசமின்றி, தமிழர் — ஆந்திரர் முதலிய வேற்றுமையின்றி, இந்தியாவின் விடுதலையை விரும்புகிறார்கள் என்றும், காங்கிரஸின் சுயராஜ்யக் கோரிக்கையை ஆதரிக்கிறார்கள் என்றும் ஏற்கெனவே ஆயிரந் தடவை ருசுவாகியிருக்கிறது.

இப்போது ஆயிரத்தோராவது தடவையாக அந்த விஷயத்தை இராஜாங்க சபை வோட்டர்கள் காங்கிரஸ் அபேட்சகரைத் தேர்ந்தெடுத்து நிரூபித்திருக்கிறார்கள்.

அவர்கள் நன்றாயிருக்கட்டும்!

ஸ்ரீ திருமல ராவின் வெற்றியினால் இந்திய அரசியல் பிரச்னை தீர்ந்துவிடுமென்று நாம் எதிர்பார்க்கவில்லை.

ஆனால் நமது இந்த இதழின் அட்டைப் படப் பிரச்னை அதனால் தீர்ந்தது பற்றி மகிழ்வுறுகிறோம்.

அதோடு ஒரு நல்ல மனுஷர், தேச பக்தர் அடைந்த வெற்றியைக் கண்டு களிப்புறுகிறோம்!



# நமது மூன்றாவது யுத்தப் படம்




இரண்டு தடவை இந்த யுத்தப் படத்தை நாம் ஏற்கெனவே தயாரித்தும், ரஷ்யர்கள் முன்னேறும் வேகத்தில் அதை மாற்றிக் கொண்டே வர வேண்டி வந்ததால், உபயோகிக்க முடியாமல் போயிற்று. இந்த மூன்றாவது படம் தயாரான பிறகும் ருஷ்யப் படைகள் இன்னும் சிறிது முன்னேறி பிரஸ்லா - பிராங்பர்ட் - ஸ்டெட்டின் நகரங்களை நெருங்கியிருக்கின்றன.




மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 26

# என்ன சேதி?

## மாணவர் ஒற்றுமை

மாணாக்கர்களுக்குள் வீண் சச்சரவு வளர்ந்து வருவது பற்றிச் சென்ற இதழில் நாம் எழுதியிருந்ததற்குத் தமிழ் நாட்டு மாணாக்கர்கள் உடனே விடைகூறி விட்டார்கள். சென்ற சனி, ஞாயிறு தினங்களில் திருச்சியில் கூடிய தமிழ் மாணாக்கர் மகாநாட்டில் இனிமேல் நம்மைப் போன்றவர்கள் புகார் சொல்வதற்கு இடம் வைத்துக் கொள்வதில்லை என்று ஏகமனதாகத் தீர்மானித்திருக்கிறார்கள். ரொம்ப சந்தோஷம். மகாநாட்டின் நடவடிக்கைகளைப் பற்றி நமது விசேஷ நிருபரின் கட்டுரை வேறிடத்தில் பிரசுரமாகியிருக்கிறது. மேற்படி மகாநாட்டில் வெளியான ஒற்றுமை மனோபாவம் தமிழ் நாடெங்கிலும் பரவி மாணவர்களிடையே நிரந்தர ஒற்றுமையாகப் பரிணமிக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

## வாலும் தலையும்

ஆங்கிலம் படித்துப் பட்டம் பெறாதவர்களும் அரசியல் நுண்ணறிவு படைத்துத் திறம்படக் காரியம் நடத்தலாம் என்பதைத் தமிழ் நாட்டில் நிரூபித்தவர்களுள் ஸ்ரீ என். அண்ணாமலைப் பிள்ளை ஒருவர். சமீபத்தில் ஏற்பட்டிருக்கும் காங்கிரஸ் சங்கக் குழப்பத்தைத் தீர்க்க ஸ்ரீ அண்ணாமலைப் பிள்ளை ஒரு யோசனை கூறினார். ஆங்காங்குள்ள பழைய தாலுகா, ஜில்லா காங்கிரஸ் கமிட்டிகளைப் புதுப்பித்து நடத்தலாம் என்பதுதான் அந்த யோசனை. மாகாண காங்கிரஸ் கமிட்டியும் சில ஜில்லா கமிட்டிகளுந்தான் சர்க்காரால் சட்ட விரோதமாக்கப்பட்டிருக்கிறதே தவிர, மற்றக் கமிட்டிகள் சட்ட விரோதமாக்கப்படவில்லை என்பதை அவர் எடுத்துக் காட்டி, நிர்மாண திட்டத்தை நடத்துவதற்குப் பழைய பிரதம காங்கிரஸ் கமிட்டிகளையே உபயோகித்துக் கொள்ளலாமே என்று கூறினார்.

இதை ஆட்சேபிக்கும் புதுக் காங்கிரஸ் சங்கப் பேர்வழிகள், "மாகாணக் கமிட்டி அமுலில் இல்லாத போது பழைய கமிட்டிகளை எப்படி நடத்தலாம்?" என்கிறார்கள். இது "வால் இல்லாமலிருக்கும்போது தலை எப்படி ஆடலாம்?" என்று கேட்கும் வாதத்தைத்தான் ஒத்திருக்கிறது. பிரதம காங்கிரஸ் கமிட்டிகள் தேர்ந்தெடுத்த அங்கத்தினர் அடங்கியதுதானே மாகாணக் கமிட்டி? அப்படியிருக்க, மாகாணக் கமிட்டி இல்லாதபடியினால், பிரதம காங்கிரஸ் கமிட்டிகள் எப்படி இல்லாமற் போய்விடும்?

## முதல் சர்க்கிள் மகாநாடு

பழைய காங்கிரஸ் கமிட்டிகளுக்கு உள்ள செல்வாக்குப் புதிய காங்கிரஸ் சங்கங்களுக்கு ஒரு நாளும் ஏற்படாது என்பதைச் சமீபத்தில் சென்னையில் நடந்த முதல் சர்க்கிள் காங்கிரஸ் மகாநாடு நிரூபித்தது. சிறந்த தேசத் தொண்டரும் சென்னை ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசியுமான ஸ்ரீ சிவஞான கிராமணியின் முயற்சியினால் நடந்த மேற்படி மகாநாடு, "இந்த மாதிரி காங்கிரஸ் கூட்டம் சென்னையில் நடந்து வெகு காலம் ஆயிற்று!" என்று சொல்லும்படியாக நடந்தது. அவ்வளவு பெருந் திரளாக ஜனங்கள் கூடியிருந்தார்கள். சிறையிலுள்ள தேசத் தலைவர்களை விடுதலை செய்ய வேண்டும் என்றும், மாகாணங்களிலும் டில்லியிலும் ஜனப் பிரதிநிதிகளின் சர்க்கார் ஏற்பட வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின. தேசத்தில் புத்துயிரை உண்டாக்குவதற்கு ராயபுரம் காங்கிரஸ் வாதிகள் சரியான வழிகாட்டியிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

***சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பத்து ரூபாய் பரிசு பெற்றவர்: டி. ரங்கராஜன், குமாஸ்தா, முனிசிபல் ஆபீஸ், மாயவரம்.***

# நிகழ்ச்சிச் சித்திரம்














ஜெர்மான்













ஸ்டாலின் மூன்றாவது தடவை கலியாணம் செய்து கொண்டதாக ஒரு செய்தி கூறுகிறது.

# அலை ஓயாது! பஸ்ய நீற்காது!

ஸ்ரீ ரவீந்திர நாதரின் கவிதைகளில் ஒன்றில் ஒரு அழகான கதை இருக்கிறது.

கடற்கரையில் பல கூழாங் கற்கள் கிடந்தன. அந்தக் கூழாங் கற்களை ஒரு கிழவன் பொறுக்கிப் பொறுக்கி அப்பால் எறிந்து கொண்டிருந்தான். அவற்றில் சில கடலிலும் விழுந்தன.

கடற்கரையில் கிடந்த அக் கூழாங் கற்களில் ஒன்று 'ரஸவேதி'க் கல் என்றும், அதைக் கொண்டு இரும்பைத் தங்கமாக்கலாம் என்றும் யாரோ ஒரு மகான் அந்தக் கிழவனுக்குச் சொல்லியிருந்தார். எனவே, கிழவன் தன் இடுப்பில் இரும்பு வளையம் ஒன்றைக் கட்டிக் கொண்டு கூழாங் கற்களை எடுத்து எறிந்து கொண்டிருந்தான். ரஸவேதிக் கல்லைத் தொட்டதும் இரும்பு வளையம் தங்கமாகும் ஆகையால், அதிலிருந்து ரஸவேதியைக் கண்டு பிடித்து விடலாம் என்று அவன் எண்ணம்.

இந்த நோக்கத்துடன் கூழாங் கற்களை எடுத்து எடுத்து எறிந்து கொண்டிருந்த கிழவனுக்கு நேரமாக ஆக ஆசையும் ஆத்திரமும் அதிகமாயின. வெகு வெகு விரைவாகக் கற்களைப் பொறுக்கி எறியலானான். அஸ்தமிக்கும் சமயத்தில் அவன் தற்செயலாகத் தன் இடுப்பைப் பார்த்த போது, இரும்பு வளையம் பொன்னாக ஜொலிப்பதைக் கண்டான். ஆனால், அந்தோ! இரும்பைப் பொன்னாக்கிய அந்த ரஸவேதிக் கல் எது? அதை அவன் தொட்டது எப்போது? அது தான் தெரியவில்லை. ஆசையிலும் ஆத்திரத்திலும் அவன் அடிக்கடி தன் இடுப்பைப் பார்க்க மறந்து விட்டான்! எனவே, கையில் கிடைத்த அற்புதக் கல்லையும் மற்றவைகளுடன் சேர்த்து எறிந்து விட்டான்.

அதிக ஆத்திரத்தினாலும் ஆசையினாலும் ரஸவேதியைக் கைநழுவ விட்ட கிழவனைப் போல் வாழ்க்கையில் கிடைக்கும் சந்தர்ப்பங்களைக் கைநழுவ விடுகிறவர்கள் பலர் உண்டு; புத்திக் குறைவினாலே அவ்விதம் சந்தர்ப்பங்களைப் பறி கொடுப்பவர்களும் உண்டு. அரசியல் வாழ்க்கையில் இதற்கு எத்தனையோ உதாரணங்களைப் பார்க்கலாம்.

தற்காலத்து உலக அரசியலில் இதற்குச் சரியான உதாரணமாய் விளங்குகிற புத்திசாலிகள் லண்டன்மா நகரிலுள்ள பழைய போலிஷ் சர்க்கார் ஆவர்.

லண்டனிலிருந்து இவர்கள் போலந்துக்குச் சென்று அங்கே ஆட்சிப் பொறுப்பை ஒப்புக் கொண்டு நடத்துவதற்கு, சில மாதங்களுக்கு முன்பு அரிய சந்தர்ப்பம் வாய்த்தது. வார்ஸா நகரம் ருஷியர்களால் பிடிபடுவதற்கு முன்பும், லப்ளினிலிருந்த போலிஷ் கமிட்டியார் 'கவர்ன்மெண்டு' பட்டத்தை வகிப்பதற்கு முன்பும் அச் சந்தர்ப்பம் வந்தது.

தடதட வென்று ருஷிய சோவியத் படைகள் முன்னேறி வந்த காலத்தில், இன்னும் அவர்கள் வார்ஸாவுக்கு வந்து சேர்வதற்கு முன்னாலேயே, லண்டன் போல்கள் ருஷிய சர்க்காருடன் சமாசத்துக்கு வந்திருக்க வேண்டும். ஆனைப்பட்ட சர்ச்சிலே அவ்விதம் ராஜி செய்து கொள்ளும்படி லண்டன் போல்களுக்குப் புத்தி சொன்னார். ஆனால் அந்த புத்திசாலிகள் கேட்கவில்லை. தோழர் ஸ்டாலின் லண்டனுக்கு அவர்களைத் தேடி வந்து காலில் விழுந்து அழைத்துக் கொண்டு போவார் என்று அந்த பிரகஸ்பதிகள் ஆசையோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஏற்கெனவே போலந்து நாடாக இருந்த பிரதேசத்தில் ஒரு அங்குலம் கூடக் குறையாமல், வின்னாமல் விரியாமல், முழுசாகத் தங்கள் கையில் வந்து விழ வேண்டுமென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கடைசியில் என்ன ஆயிற்று? கிடைத்த சந்தர்ப்பம் அடியோடு கைநழுவிப் போய்விட்டது. லப்ளின் கமிட்டி, 'லப்ளின் கவர்ன்மெண்ட்' ஆயிற்று. வார்ஸா பிடிபட்டதும்

அந்தப் புது கவர்ன்மெண்டார் லண்டனி லிருந்து வாசலைக் கூடப் போய் அழுத்தமாய் உட்கார்ந்து கொண்டார்கள்.

இவ்வளவு ஆன பிறகு, லண்டனிலிருந்த பிரகஸ்பதிகளுக்குப் புத்தி வந்தது. "ஐயோ! போய் விட்டதே!" என்று அலறி, "நாங்கள் போலந்துக்கு வரத் தயார்; இதோ டிக்கட் வாங்கி விட்டோம்; இதோ மூட்டை கட்டி விட்டோம்!" என்று தந்திக்குமேல் தந்தியாக அடித்தார்கள். ஆனால் தந்திகள் எல்லாம் 'விலாசதாரர் வாங்கிக் கொள்ள மறுத்த'படியால் திரும்பி வந்து சேர்ந்தன!

* * *

மேற்கண்ட விதமாகச் சந்தர்ப்பத்தை அடியோடு கைவிடாமல் புத்திசாலித்தனமாய் நடந்து கொண்டவர்களுக்கும் ஒரு உதாரணம்.

கிரேக்க நாட்டில் ஈ.ஏ.எம். என்றும் ஈ.எல்.ஏ.எஸ் என்றும் சொல்லப்படும் பொதுவுடைமைக் கட்சியின் காரியங்களைப் பாருங்கள்.

கிரீஸிலிருந்து ஜெர்மானியர் விரட்டியடிக்கப்பட்டதும் கிரேக்க நாட்டின் அரசாங்கத்தை மேற்படி பொதுவுடைமைக் கட்சியினர் கைப்பற்றிக்கொள்ளப் பார்த்தனர். நியாயமாக அதற்கு அவர்களுக்கு உரிமை இருந்தது. ஏனென்றால், கிரீஸ் ஜெர்மானியர் வசமிருந்த போது ஒளிந்தும் பதுங்கியும் இருந்து ஜெர்மானியருடன் போர் தொடுத்து வந்தவர்கள் அவர்கள்தான். ஆனாலும் அவர்களால் தனிப்பட ஜெர்மானியரைத் துரத்த முடியவில்லை. பிரிட்டிஷ் துருப்புகள் வந்துதான் துரத்த வேண்டியதாயிற்று.

பிரிட்டிஷார் வந்தபடியால் நிலைமையில் குழப்பம் ஏற்பட்டது. கிரீஸில் கலப்பற்ற பொதுவுடைமை ஆட்சி ஏற்படுவதைச் சர்ச்சில் விரும்பவில்லை. கிரீஸில் பிரிட்டிஷார் போட்டிருந்த ஏராளமான மூலதனம் முதலிய பல காரணங்கள் அதற்கு இருந்தன. எனவே, பொதுவுடைமைக்கு எதிரான முதலாளிக் கும்பலை ஆதிக்யத்தில் நிறுத்தச் சர்ச்சில் முயன்றார்.

பிரிட்டிஷ் சூழ்ச்சியைத் தடுக்கக் கிரேக்கப் பொதுவுடைமை வாதிகள் எவ்வளவோ முயற்சி செய்தார்கள். ஆனால் அவர்கள் பூரண வெற்றியடையவில்லை. கிரீஸானது பிரிட்டிஷ் சைன்யத்தின் வசம் இருந்தபடியால் அது சாத்தியமாகவில்லை.

ஆனாலும் அவர்கள் போட்ட கூச்சலும் கிளர்ச்சியும் உலகத்தின் கவனத்தை இழுத்தது. சர்ச்சிலும் ஈடனும் கிரீஸுக்கு ஓட வேண்டியிருந்தது. ஏதோ கண் துடைக்கும் சமரச மகாநாடு ஒன்றும் நடந்தது. காரியத்தைக் குழப்பி உலக அபிப்பிராயத்தின் கூர்மையையும் மழுக்கி விட்டுச் சர்ச்சில் திரும்பி வந்து சேர்ந்தார்.

ஆனாலும், கிரேக்கப் பொதுவுடைமைக் கட்சியார் என்ன செய்தார்கள்? "இராஜ்யம் பூராவையும் எங்கள் கையில் கொடுத்தால்தான் ஆயிற்று; இல்லா விட்டால் சண்டை போட்டுச் சாவோம்" என்றார்களா? கிடையாது! செத்துப் போனவர்களுக்குப் பரலோக ராஜ்யந்தான் என்றும், உயிரோடு இருந்தால்தான் அடுத்தபடியாகச் சண்டை போடலாம் என்றும் அவர்களுக்குத் தெரியும். இப்போது கிடைத்த சந்தர்ப்பத்தைக் கைவிட்டால், அப்புறம் சந்தர்ப்பம் வராமலே போய் விடலாம் என்பதை அவர்கள் அறிவார்கள்.

எனவே, சமரசப் பேச்சை அவர்கள் அடியோடு முறித்து விடவில்லை. பிரிட்டிஷ் ஆதரவு பெற்ற தளபதி பிளாஸ்டிராஸின் கவர்ன்மெண்டார் கொஞ்சம் இறங்கி வந்ததை உபயோகப்படுத்திக் கொண்டு சமரசப் பேச்சு நடத்தி வருகிறார்கள். இன்றைக்கோ நாளைக்கோ சமரச முடிவு ஏற்பட்டு விடலாமென்று கடைசியாக வந்த செய்தி சொல்கிறது.

கிரேக்கப் பொதுவுடைமைக்காரர்கள் பிழைக்கிற பிள்ளைகள்; காரியவாதிகள். சர்க்காரில் பாதி கிடைத்தாலும் புகுந்து கொள்ளலாம், பாக்கிப் பாதியைத் தங்கள் கட்சியின் நியாய பலத்தினாலும் பொதுஜன ஆதரவினாலும் கைப்பற்றலாம் என்று அவர்கள் காரியம் நடத்துகிறார்கள்.

* * *

வந்த சந்தர்ப்பத்தைக் கைவிடாமல் அடித்துப் பிடித்துக் காரியத்தைச் சாதித்துக் கொண்டு வருகிறவர்களுக்கு இந்த நாளில் இன்னொரு உதாரண புருஷராய் விளங்குகிறவர் பிரெஞ்சு சர்க்கார் தலைவரான தளபதி டிகால்.

யுத்தத்தின் ஆரம்பத்தில் பிரான்ஸ் அடியோடு விழுந்து விட்டது. இனி மேல் பிரான்ஸ் தலையெடுக்கவே போவதில்லையென்று அநேகர் எண்ணினார்கள். ஏறக்குறைய ஐந்து வருஷம் பிரான்ஸ் ஜெர்மன் ஆதிக்கத்தில்

இருந்தபோது, மார்ஷல் பெடெய்ன் என்பவர் பிரெஞ்சு சர்க்கார் தலைவராயிருந்து ஜெர்மனியோடு ஒத்துழைத்து வந்தார். பிரான்ஸின் சுதந்திரம் பறிபோயிருந்தது. பிரான்ஸின் பிரசித்தி பெற்ற வீர சைனியம் கலைக்கப்பட்டிருந்தது. பிரான்ஸின் புகழ் பெற்ற கடற்படை கடலில் மூழ்கடிக்கப்பட்டது. பிரெஞ்சுக்காரர்கள் 'கத்தி கபடா' எடுக்க யோக்கியதை இல்லாத ஜனங்களாகி, ஜெர்மனியின் கீழ் அடங்கி ஒடுங்கி அடிமைகளாக வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

ஆனால், அறிவாளியான ஒரே ஒரு பிரெஞ்சுக்காரர் தமக்கொரு சந்தர்ப்பம் வரும் என்று அயல் நாடுகளில் பொறுமையுடன் காத்துக் கொண்டிருந்தார். அவர்தான் தளபதி டிகால்.

ஐந்து வருஷம் காத்திருந்த பிறகு கடைசியில் ஆறு மாதத்துக்கு முன்பு அச்சந்தர்ப்பம் வந்தது. வந்ததோ, இல்லையோ, டிகால் பாய்ந்து வந்து அதில் புகுந்துகொண்டார்.

அமெரிக்க—பிரிட்டிஷ் சைன்யங்கள் படையெடுத்து நார்மண்டியில் இறங்கியபோது, டிகால் தம்மை யாரும் அழையாமலே அவர்களுடன்கூட இறங்கினார். அமெரிக்கப் படை என்றைக்குப் பாரிஸில் புகுந்ததோ அன்றைய தினமே டிகாலும் பாரிஸில் பிரவேசித்தார். தம் இஷ்டப்படி ஒரு அரசாங்கத்தையும் ஏற்படுத்திக் கொண்டார். ஒருவரையும் கேட்காமல் அவர் பாட்டுக்கு அறிக்கைமேல் அறிக்கையும் உத்தரவுக்குமேல் உத்தரவும் விட ஆரம்பித்தார்.

டாங்கிகள் இல்லையே, விமானங்கள் இல்லையே என்று யோசியாமல், சுமா சோமா என்று ஒரு பிரெஞ்சு சைன்யத்தையும் தயார் செய்தார். தயார் செய்துகொண்டு "ஆயுதங்கள் எங்கே?" என்று பிரிட்டனையும் அமெரிக்காவையும் கேட்டார். கேட்டுவிட்டுப் பதிலுக்குக் காத்திராமல் சைன்யத்தை ஜெர்மனியுடன் சண்டைபோட ஜெர்மன் எல்லைக்கே அனுப்பிவிட்டார். ஆயுதமா, தோல்வியா என்பதைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. கப்பலில் பாதிப் பாகுப் போட்டதுபோல் பிரெஞ்சு சைன்யமும் சண்டைபோட்டது என்று பெயர் பண்ணினார்! வெற்றி நெருங்கிக் கொண்டிருக்கும் இச்சமயத்தில் மனுஷர் சக்கைப்போடு போட்டுக் கொண்டிருக்கிறார். தம்முடைய அறிக்கை ஒன்று வெளிவராமல் ஒருநாள்கூடச் சூரியன் அஸ்தமிப்பதற்கு அவர் விடுவதில்லை.

"பிரான்ஸை விட்டுவிட்டு நீங்கள் மூன்றுபேரும் கூடவாவது?" என்று கர்ஜிக்கிறார். "ஜெர்மனியின் வருங்காலம் பிரான்ஸுக்கல்லவா முக்கியம்?" என்று கேட்கிறார். "நீங்கள் என்ன சண்டைபோட்டுப் புரட்டிவிட்டீர்கள்? எங்கள் பூமியில் நின்று, எங்கள் ஆகாச விமான கூடங்களைப் பயன்படுத்தி, எங்கள் தயவினால்தானே சண்டை போடுகிறீர்கள்? பிரான்ஸ் இல்லாவிட்டால் உங்கள் கதி என்ன?" என்று பிய்த்து வாங்குகிறார்!

இதெல்லாம் சில சமயம் நமக்குச் சிரிப்பூட்டிய போதிலும், டிகால்தான் உண்மையில் 'பிழைக்கிற பிள்ளை' என்பதில் சந்தேகமில்லை. இப்படியெல்லாம் அவர் வாயடி அடித்து தடபுடல் செய்வதில் பிரயோஜனம் இல்லாமற் போகவில்லை. வரப்போகும் சமாதான மகாநாடுகளில் பிரான்ஸுக்கு ஒரு முக்கிய ஸ்தானம் கிடைக்கத்தான் போகிறது. பிரான்ஸை அடியோடு அலட்சியம் செய்து விட்டு மற்றவர்கள் காரியம் நடத்திக் கொண்டு போக முடியப் போவதில்லை.

• • •

சரி, இந்தியாவுக்கு வருவோம்.

இந்தியாவில் நாம் கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டோமா? கிடைக்கப் போகிற சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொள்ள ஆயத்தமாயிருக்கிறோமா?

நாலு வருஷத்திற்கு முன் இந்தியாவுக்கு ஓர் அற்புதமான சந்தர்ப்பம் கிடைத்தது. ருஷ்யாவின் மீது ஜெர்மனி படையெடுத்தபோது அந்த சந்தர்ப்பம் வந்தது. யுத்தத்தில் ஜயிக்கிற கட்சி எது என்பது புத்தி உள்ளவர்களுக்கெல்லாம் அப்போதே புலனாகி விட்டது.

பல வருஷ காலமாக ஹிட்லர்-முஸோலினியைக் கண்டித்தும் ருஷ்யாவை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றி வந்த காங்கிரஸ் மகாசபை, அப்போது எவ்விதத் தயக்கமுமின்றி யுத்தக் கொள்கையை மாற்றிக் கொண்டிருக்கலாம்; சர்க்காரைக் கைப்பற்றியிருக்கலாம். அப்படிச் செய்திருந்தால் இந்த நாலு வருஷத்தில் இந்தியாவின் அந்தஸ்து எவ்வளவோ உயர்ந்திருக்கும். இந்திய அரசாங்கத்தை இந்தியாவின் உண்மைத் தலைவர்கள் நடத்திக் கொண்டிருப்பார்கள்

அந்த சந்தர்ப்பத்தை அநியாயமாகக் கைநழுவ விட்டோம்.

இங்லீஷ்காரர்கள் இந்தியாவை விட்டு அடியோடு போன பிறகு தான் நாம் அரசாங்கம் நடத்துவோம் என்றோம்.

அதாவது, அலை ஓய்ந்த பிறகுதான் கடலில் குளிக்க இறங்குவோம் என்றோம். பஸ் காலியான பிறகுதான் அதில் ஏறுவோம் என்றோம். ஆனால், அலை ஓயவில்லை; பஸ் நிற்கவில்லை.

அந்த சந்தர்ப்பம் போய் விட்டது.

ஆனால், லண்டன் போலிஷ் சர்க்காருக்கு சந்தர்ப்பம் அடியோடு போய் விட்டதுபோல் நல்லவேளையாக இந்தியாவுக்குப் போய்விடவில்லை.

போன பஸ் நமக்காகத் திரும்பி வந்திருக்கிறது. இப்போதாவது நெருக்கியடித்து ஏறிக் கொள்ளப் போகிறோமா, அல்லது மறுபடி இடநெருக்கடியென்று வெளியிலேயே நிற்கப் போகிறோமா?

இப்போது வந்திருக்கும் சந்தர்ப்பம் யுத்தம் முடியும் வரையில்தான் இருக்கும். யுத்தம் முடிவதற்குள் நாம் சர்க்காரைக் கைப்பற்றிக் கொண்டால்தான் கொண்டது. அப்போதுதான் யுத்தத்திற்குப் பிறகு வரப்போகும் உலக சமாதானக் கூட்டங்களில் இந்தியாவுக்கு அந்தஸ்து இருக்கும். இந்தியாவின் பேச்சுக்கு மதிப்பு இருக்கும். இந்தியாவின் நலன்களையும் தக்கபடி காப்பாற்றிக் கொள்ளலாம்.

யுத்தத்திற்குப் பிறகு இரண்டு மூன்று வருஷகாலம் இப்போதிருப்பதைப் போல் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்துக்கு உட்பட்டிருந்தால் அப்புறம் இந்தியாவைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்.

பிரிட்டிஷார் இந்த யுத்தத்தில் அடைந்திருக்கும் கஷ்ட நஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. அந்த நஷ்டங்களையெல்லாம் ஈடு செய்து கொள்ள இந்தியாவை அவர்கள் உபயோகப் படுத்திக் கொள்வது இயல்பேயாகும்.

அதற்கு இடம் கொடாமல் இருக்க வேண்டுமானால் இப்போதுதான் அதற்குக் கடைசி சந்தர்ப்பம். சிறையிலுள்ள காங்கிரஸ் தலைவர்கள் வெளிவரவேண்டும். பிரிட்டிஷ் ஏகாதிபத்ய காரம் மாறி தேசிய சர்க்கார் ஏற்பட வேண்டும்.

தேச நன்மையில் கருத்துள்ளவர்கள் எல்லாரும் இப்போது கவனம் செலுத்த வேண்டிய காரியங்கள் இரண்டே இரண்டுதான்.

1. தேசத் தலைவர்கள் சிறையிலிருந்து விடுதலையாகவேண்டும்.

2. யுத்தம் முடிவதற்குள் தேசிய சர்க்கார் ஏற்பட வேண்டும்.

இந்த இரண்டு நோக்கங்களுக்கும் இடையூறு விளைவிக்கும் காரியங்களைச் செய்பவர்கள் எல்லாம் தேசத்துக்குப் பெருங் கெடுதல் செய்கிறார்கள். செய்கிறவர்கள் எவ்வளவு தியாகிகளாயிருந்தாலும் என்ன நோக்கத்தோடு செய்தாலும் கெடுதல் கெடுதல்தான்.

கடைசியாக வற்புறுத்திக் கூறுகிறோம். நமக்காகக் கடல் அலை ஓயாது; நமக்காக பஸ்ஸும் காத்துக்கொண்டிராது. அலை அடிக்கும்போதே கடலிலிறங்கிக் குளிக்க வேண்டியதுதான். பஸ்ஸில் நெருக்கடியிருந்தாலும் ஏற வேண்டியதுதான்.

பஸ்ஸில் ஏறி விட்டால் இடம் பிடித்து உட்காரலாம்; ஏற்கெனவே இருப்பவர்களைத் தள்ளி விட்டுக் கூட உட்காரலாம். இடமில்லையென்று நின்று கொண்டிருந்தால், நின்று கொண்டே யிருக்க வேண்டியதாகும். பஸ் போயே போய்விடும்.

# எட்டயபுரத்தில் எதற்கு?

கும்பகோணம் டாக்டர் ஆர். மகாலிங்கம் அவர்கள் பாரதியாரிடத்தும் பாரதி பாடல்களிடத்தும் பேரன்பு உள்ளவர். கும்பகோணத்தில் பாரதியார் விழா சிறப்பாக நடத்தி வருகிறவர்.

நமது எட்டயபுரம் பாரதி ஞாபகச் சின்ன நிதி ஆரம்பித்தபோது, டாக்டர் மகாலிங்கத்துக்கு அது அவ்வளவு முக்கியமான காரியமாகத் தோன்றவில்லை. "தமிழ் நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் பாரதியாருக்கு ஞாபகச் சின்னம் ஏற்படுவது அவசியமாயிருக்க, எட்டயபுரத்துக்கு மட்டும் தனிப்பட என்ன முக்கியம் வந்தது?" என்று டாக்டர் ஆட்சேபித்தார்.

ஆனால் பிற்பாடு டாக்டர் மகாலிங்கம் தமது ஆட்சேபத்தைத் தாமே நிவர்த்தி செய்து கொண்டதுமன்றி எட்டயபுரம் நிதிக்கு ரூ. 25 நன்கொடையும் அனுப்பினார். அத்துடன் வந்த கடிதத்தில் மேற்படி பாரதி அன்பர் குறிப்பிட்டிருப்பதாவது :—

"அநேக ஊர்களில் இப்பொழுது பாரதி தினம் கொண்டாடப்படுகிறது. அநேகமாய் ஒவ்வொரு வருஷமும் நடக்கின்றது. மூன்று வருஷத்திற்கு ஒரு முறையோ அல்லது ஐந்து வருஷத்திற்கு ஒரு முறையோ எல்லா ஊர்ப் பிரதிநிதிகளையும் சேர்த்துக்கொண்டு எட்டயபுரத்திலேயே பாரதி விழாவைக் கொண்டாட ஏற்பாடு செய்ய வேண்டும். அப்பொழுது எல்லா ஊர்களிலிருந்தும் அன்பர்கள் அங்கு வந்து கூடியிருக்கவும் பாரதியாரின் ஞாபகத்தை வளர்க்கவும் ஒரு சந்தர்ப்பம் ஏற்படும். இம்மாதிரி நடத்தும் வைபவத்திற்கு அந்தந்த ஊரின் உள்ள பாரதி விழாக் கமிட்டிகளும் மற்றவரும் பொருளுதவி செய்தால் ஒரு பெரிய பாரதி மகாநாடாகவே எட்டயபுரத்திலே நடத்தலாம். அநேகரின் தொடர்பு அடிக்கடி ஏற்படுவதால் தாங்கள் ஏற்படுத்தப் போகும் புத்தக நிலையம் முதலியவையும் மேலும் மேலும் வளர்ந்து உற்சாகத்துடன் நடந்து வரும். தாங்கள் மேற்கூறிய யோசனையையும் நடத்தி வைப்பீர்கள் என்று நினைக்கிறேன்."

டாக்டர் மகாலிங்கம் அவர்களின் யோசனையை ஒரு சிறு திருத்தத்துடன் நான் ஆமோதிக்கிறேன். அதாவது மூன்று வருஷத்துக்கு ஒரு தடவை அல்லது ஐந்து வருஷத்துக்கு ஒரு தடவை மட்டுமல்ல; வருஷந்தோறும் எட்டயபுரத்தில் பாரதி விழாக் கொண்டாட வேண்டும் என்றும், அவ்விழா தமிழ் நாட்டுக்கே பொதுவான தேசிய வைபவமாக நடைபெற வேண்டுமென்றும் கருதுகிறேன்.

பாரதியார் அமர வாழ்வு அடைந்த தினத்தை இப்போது தமிழ் நாட்டில் எல்லா இடங்களிலும் கொண்டாடுகிறோம். பாரதியார் பிறந்த தினத்தில் அவர் பிறந்த ஊரில் தேசிய விழாவாகக் கொண்டாடுவது சிறப்பாயிருக்குமல்லவா?

ஓர் உதாரணம் பார்க்கலாம்: தமிழ் நாட்டின் பரம்பரைச் சொத்தான கர்நாடக சங்கீதத்துக்கு மகோன்னதம் அளித்த ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளுக்கு சங்கீத அபிமானிகள் உள்ள இடங்களில் எல்லாம் உற்சவம் நடத்துகிறார்கள். ஆனாலும் அவர் சமாதி அடைந்த திருவையாற்றில் வருஷந்தோறும் தை மாதத்துப் பகுள பஞ்சமியில் நடக்கும் உற்சவத்துக்கு ஒரு தனி மகிமை இருக்கிறது. நாடெங்குமுள்ள சங்கீத வித்வான்கள் அங்கே வந்து சிறப்பாக உற்சவம் நடத்துகிறார்கள்.

அதுபோலவே தமிழ்நாடெங்கு முள்ள தமிழன்பர்களும் தமிழ் நாட்டுக்கு அப்பாலுள்ள தமிழன்பர்களும் கூட வருஷம் ஒரு தடவை எட்டயபுரத்தில் வந்து கூடி ஒரு நாளோ அல்லது மூன்று நாளோ உற்சவம் நடத்தினால், தமிழ் நாட்டின் புது வாழ்வுக்கே அது ஆதாரமாகக் கூடுமல்லவா?

மேலே குறிப்பிட்ட டாக்டர் மகாலிங்கத்தின் கடிதத்தில் ஒரே வாக்கியத்தை மட்டும் நான் ஒத்துக்கொள்ள முடியாது. அது கடைசி வாக்கியமேயாகும். எட்டயபுரத்தில் பாரதி விழா நடத்தும் பொறுப்பை என் தலையிலேயே சுமத்தி விடலாமென்று அவர் பார்க்கிறார்! தனிப்பட அப்பொறுப்பை வகிக்கும் சக்தி எனக்கு இல்லை. நாடெங்கு முள்ள தமிழன்பர்களும் பாரதி பக்தர்களும் சேர்ந்து செய்யவேண்டிய காரியம்.

• • •

பாரதியார் நிதி பிப்ரவரி 8உ யோடு ரூ. 30 000 த்தைத் தாண்டி விட்டது என்பதைக் குதூகலத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த வாரத்து நன்கொடைகளில் "ஹிந்து" ஆசிரியர் ஸ்ரீ கே. சீனிவாசன் அவர்களுடைய ரூ. 500/-உம் "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். சீனிவாசன் அவர்களின் ரூ. 100/-உம், "லிபரல்" "பாரததேவி" பத்திரிகைகளுக்காக ஸ்ரீ எஸ். வி. ஸ்வாமி அவர்களின் ரூ. 500/- நன்கொடையையும் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்.

விவரமான ஜாபிதா அடுத்த இதழில்.

# தஞ்சாவூர் நாணு கச்சேரி

'இசைத்தேனி'*

தமிழ்ப் பாட்டாயினும் சரி, வேறெந்த உருப்படியாயினும் சரி, சங்கீதத்தில் உயர்ய ஞானமுடையோர் பாடினால் அழகாய்த் தானிருக்கும். அதிலும், ரஞ்சகம் கொண்ட சாரீரமும் அழகு பாணியும் சேர்ந்து விட்டால், கேட்கவேண்டுமோ? சென்ற ஞாயிற்றுக்கிழமை தஞ்சாவூர் லக்ஷ்மி நாராயணன் செயிண்டு மேரீஸ் ஹாலில் தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் செய்த கச்சேரி, அத்தகைய மனங்கவரும் அழகு அம்சங்கள் பொருந்தியிருந்தது. தற்காலம் ஸங்கீத மேடைக்கு அணிகலமாய் முன்னணியில் நிற்கும் வித்வான்களில் அவர் ஒருவர் என்பதற்கு அக்கச்சேரி அத்தாக்ஷியாயிருந்தது.

சங்கீதத்தின் பாணியழகு சாரீரத்தைப் பொறுத்தது. தஞ்சாவூர் நாணுவுக்கு இயற்கையிலேயே கமகமும் கனிட்பும் கொண்ட குரல். சாதகத்தினால் நினைத்தபடி பேசும் சரளமான உதவுபடி. வர வர அதற்கு கனைய பேதங்களும் கொடுத்து மேல் ஸ்தாயி சஞ்சாரங்களில் காஸுக்குப் பழக்குகிறார். தமக்குள்ள ஞானத்தையும் வேலைப்பாடுகளையும் விதரணையாய் வெளியிட்டுக் கேட்போரை ரஞ்சிப்பதற்கு இன்றியமையாத அழகுணர்ச்சியையும் பெற்றிருக்கிறார். அத்துடன் அவர் வழி, கமகங்களையே பெரும்பாலும் அஸ்திவாரமாகக் கொண்டது. எனவே அவர் சங்கீதம் எளிதில் கவர்ச்சியைக் கொடுப்பதில் ஆச்சரியமில்லை.

இசைச் சங்கக் கச்சேரியில் பெரும்பாலும் அழகிய தமிழ்ப் பாட்டுக்களையே கையாண்டார். ஒவ்வொன்றும் உயர்ந்த ரகமாகவே தென்பட்டது. கேதாரத்தில் 'மறவாதிரு' என்ற உருப்படியுடன் தொடங்கி 'வாழிய செந்தமிழ்' பாடி முடியும் வரை கச்சேரி சலியாத இன்பமளித்தது. அன்று அவர் ஆலாபனைக்கு எடுத்துக்கொண்ட ராகங்களில் பைரவியும் பிலஹரியும் முதல் ஸ்தானத்துக்குப் போட்டியிட்டன. கல்யாணியும் ஆனந்த பைரவியும் கண்யமாய் உலாவிவந்தன. சஞ்சாரங்களைப் 'பல்டி' பண்ணி அனாயாசமாய் எளிய நடையில் வெளியிடும் திறமை அவரிடம் குறிப்பிடத்தக்கது. பைரவியில் அருணாசலக் கவியின் 'யாரோ இவர் யாரோ' என்ற உருப்படி விசேஷ பாவத்துடன் விளங்கியது. 'சந்திரபிம்ப' என்ற இடத்தில் நிரவல் மூலம் ராகபாவம் முழுவதையும் அள்ளி எடுத்தார். நிரவலின் முக்கியத்தையும் அழகையும் கண்டறிந்து உபயோகிக்கும் தற்கால வித்வான்களில் லக்ஷ்மீ நாராயணன் ஒருவர். பிலஹரியில் பாடிய 'பால் மருகனை நினை' என்ற உருப்படி சாதாரணமாய்க் கேட்கப்படாத அபூர்வ வஸ்துவாகவே தென்பட்டது.

**பல்லவி** ராகமான காம்போதியை விஸ்தாரமாய் வழங்கினார். தானத்தில் தெளிந்த நாதம் கண்டது. 'இல்லை ஈசனைக்காண என்ன புண்ணியம் செய்தேனோ' என்ற பல்லவியும் அதில் அமைந்ததோர் ராகமாலிகையும் விமரிசையாயிருந்தன. 'மாயே' உருப்படியில் 'குருகுஹா' என்ற இடத்தை இயற்கையான மேல் ஸ்தாயியிலேயே பாடியது சிறப்பாயிருந்தது.

மொத்தத்தில் கச்சேரி ரொம்ப ஜோராயிருந்தது. ஆனால், இப்போது தஞ்சாவூர் நாணுவிடம் காணும் சங்கீத பாணி இன்னும் விசாலமடைய இடமிருக்கிறது. ஏற்கனவே அமைந்திருக்கும் பல அழகு அம்சங்களோடு கற்பனை விஸ்தாரமும் சேரச் சேர, அவருடைய சங்கீதம் மிகவும் மேன்மையடையும்.

அன்று பக்க மேளமாய் அமைந்த ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளையின் பிடில் வாத்தியத்தையும் பழனி சுப்ரமணிய பிள்ளையின் மிருதங்கத் திறமையையும் பாராட்டாமலிருக்க முடியாது. மூலவருக்குச் சரீரம் எப்படியோ அப்படியே மனதும் பெரிது! கச்சேரியைப் போஷிப்பதில் சிகரமவர். ஸ்ரீ சுப்ரமணிய பிள்ளையும் அதற்கேற்றவாறு பூரணமாய் ஒத்துழைத்து வாசித்தார். பிடிலும் மிருதங்கமும் மட்டும் சேர்ந்து வாசித்த இடங்கள் பிரமாதமாய்ச் சோபித்தன.

---

* 'இசைத்தேனி'யின் இந்த வார வான சஞ்சாரமும் அடுத்த இதழில் சேர்ந்து வெளிவரும்.

# ஜிந்தாபாத்  மகாநாடு

சாவி

அதென்னவோ, நானும் சாமாவும் திருச்சியில் நடந்த தமிழ்நாட்டு மாணவர் சம்மேளன மகாநாட்டுக்குப் போக வேண்டுமென்றுதான் கிளம்பினோம். ஆனால் இப்படி எதிர்பாராத விதமாய் ஜிந்தாபாத்துக்குப் போய்ச் சேருவோம் என்று நாங்கள் சொப்பனத்திலும் நினைக்கவில்லை. வாலாஜாபாத்துக்கோ, ஆமதாபாத்துக்கோ அல்லது செகந்தராபாத்துக்கோ போயிருந்தால்கூட கவலையில்லை. முன்பின் தெரியாத ஏதோ ஒரு ஜிந்தாபாத்தில் போய் அகப்பட்டுக் கொண்டோமே என்று நாங்கள் தவியாய்த் தவித்துப் போனோம்.

எழும்பூர் ஸ்டேஷனை விட்டுக் கிளம்பிய 'போட்மெயில்' மாயவரம் வரை சரியாய்த்தான் போய்க்கொண்டிருந்தது. ஒவ்வொரு ஸ்டேஷனிலும் வண்டி நின்றதும் அந்தந்த ஸ்டேஷன் போர்ட்டர்கள் பிளாட்பாரத்திலிருந்து 'விழுப்புரம், சிதம்பரம், மாயவரம்" என்று அந்தந்த ஊர்ப்பெயர்களைச் சொல்லிக் கூக்குரலிட்டனர். கடைசியில் ரயில் திருச்சியில் போய் நின்றதும் பிளாட்பாரத்தில், "ஜிந்தாபாத்! ஜிந்தாபாத்!" என்று ஒரே கூக்குரலாயிருந்தது.

"இதென்னவேடிக்கை! திருச்சிக்கு எப்போது 'ஜிந்தாபாத்' என்று பெயர் வைத்தார்கள்? இதை எப்படி திராவிடஸ்தான் ஆசாமிகள் ஒப்புக்கொண்டார்கள்?" என்று எனக்கு ஒரே ஆச்சரியமாய்ப் போய்விட்டது. நல்ல வேளையாக இதற்குள் அந்தப் பக்கம் வந்த மகாநாட்டு மாணவர்கள் சிலர் என் சந்தேகத்தையும் ஆச்சரியத்தையும் தீர்த்து வைத்தார்கள். 'ஜிந்தாபாத்' கூச்சலை அவர்கள்தான் போட்டார்களாம். காரணம், நாங்கள் சென்றிருந்த அதே போட்மெயிலில்தான் மாணவர் மகாநாட்டைத் திறந்து வைக்கப் போகும் லக்ஷ்மணபுரி புரொபஸர் டாக்டர் அலீம் அவர்களும் வந்திருந்தார். அவரை வரவேற்பதற்காக ஸ்டேஷனுக்கு வந்திருந்த மாணவர்கள்தான் அப்படிக் கூச்சல் போட்டனர். "டாக்டர் அலீம் ஜிந்தாபாத்" (டாக்டர் அலீம் வாழ்க!) என்று அவர்கள் போட்ட கூச்சலைக் கேட்டே ஏமாந்து போனோம். ஹிந்தியில் 'ஜிந்தாபாத்' என்றால் தமிழில் 'வாழ்க' என்று அர்த்தமாம்.

மகாநாட்டுக்கு முதல் நாள் சனிக்கிழமையன்று காலை பதினொரு மணிக்குப் பிரதிநிதிகள் கூட்டம் ஆரம்பமாயிற்று. கூட்டத்துக்குச் சுமார் 300 பிரதிநிதிகளும் 600 விசிட்டர்களும் வந்திருந்தனர். புதிதாக முளைத்திருக்கும் காங்கிரஸ் சங்கத்தின் குருக்ஷேத்திரமாய் விளங்கும் அரியலூரிலிருந்து கூட சில மாணவர்கள் இந்த மகாநாட்டுக்கு வந்திருந்தார்கள். அகில இந்திய மாணவர் சம்மேளனத்தின் உதவிக் காரியதரிசி ஸ்ரீ பிரஸாந்த ஸன்யால் இம் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தார். முதன் முதலாகத் தோழர் ஸ்ரீ எஸ். ராமகிருஷ்ணன் எழுந்து பேசினார்: மாணவர் சம்மேளனம் ஒரு தனிப்பட்ட கட்சியைச் சேர்ந்த ஸ்தாபனம் அல்லவென்றும், ஜனநாயக ஸ்தாபன



டாக்டர் அலீம்

மென்றும், பலதரப்பட்ட கட்சி மாணவர்களுக்கும் இதில் இடம் உண்டென்றும் கூறிவிட்டு, தற்போது மாணவர்களுக்கிடையே நடந்து வரும் "மக்கள் யுத்தமா? ஏகாதிபத்திய யுத்தமா?" என்கிற யுத்தத்தை சேரியில் தூக்கிப் போட்டு விட்டு, மாணவர்கள் அனைவரும் ஒரு முகமாகத் தேச சுதந்திரத்துக்காக உழைக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்.


தோழர் ராமகிருஷ்ணன்

பின்னர் மகாநாட்டுக்கு வந்திருந்த பல கட்சியைச் சேர்ந்த மாணவர்களும் மேடைமீது வந்து அவரவர்களுடைய அபிப்பிராயத்தைக் கூறி மாணவர்கள் ஒற்றுமையை வற்புறுத்தினார்கள். சில மாணவர்கள் "ஏகாதிபத்தியத்தைக் கவிழ்ப்போம்!" என்று ஆவேசத்துடன் 'மைக்' கின்மீது பாய்ந்து வந்தார்கள். இதை முன்னிட்டு ஒருவர் அவ்வப்போது மைக்கை முன்னால் தள்ளிக் கொண்டே வந்தார். மாணவர்களும் விடாமல் தொடர்ந்து 'மைக்' கின்மீது பாய்ந்து வந்துகொண்டே இருந்தனர். "ஏகாதிபத்தியத்தைக் கவிழ்க்கிறேன் என்று சொல்லிக் கொண்டு எங்கே மைக்கைக் கீழே கவிழ்த்து விடப் போகிறார்களோ?" என்று எனக்கு ஒரே பயமாய்ப் போய்விட்டது.

பிரதிநிதிகள் கூட்டம் முடிந்ததும், மாலை நாலு மணிக்குக் கொடியேற்று விழாவும் பிறகு வரவேற்புக் கமிட்டித் தலைவர் புரொபஸர் பார்த்தசாரதியின் (புரொபஸர் என்றால் ஏதோ 'மாஜிக்' வேலைகள் செய்யும் புரொபஸர் என்று இவரைப் பல பேர் எண்ணிக் கொண்டிருக்கலாம்!) பிரசங்கமும் நடைபெற்றது. கொட்டகையில் இந்த சமயம் ஒரே 'ஜிந்தாபாத்' ஆரவாரமாயிருந்தது. ஆரவாரத்துக்கிடையே டாக்டர் அலீம் எழுந்திருந்து தமது திறப்பு விழாப் பிரசங்கத்தை ஆரம்பித்தார். "ருஷ்யா சிருஷ்டிக்க விரும்பிய உலக சகாப்தத்தைப் பற்றி ஏற்கெனவே உங்கள் தீர்க்கதரிசியும் அமர கவியுமான ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் வாழ்த்தியிருப்பதை நீங்கள் அறிவீர்கள். ருஷ்யாவைப் போல் நீங்களும் ஒற்றுமைப் பட்டுத் தளராத ஊக்கத்துடன் இருந்து தேச விடுதலைக்காகப் பாடுபட வேண்டும்" என்று அவர் கூறி முடித்ததும் கொட்டகையில் இடி முழக்கம் போன்ற கரகோஷம் எழும்பியது. அத்துடன் டாக்டர் அலீம் பேசுவதற்கு முன் நான் கொண்டிருந்த அபிப்பிராயத்தையும் மாற்றிக் கொள்ளும்படி ஆயிற்று.

"தமிழ் நாட்டில் தமிழ் மாணவர்கள் கூடும் ஒரு மகாநாட்டைத் திறந்து வைக்கத் தமிழ் நாட்டில் எத்தனையோ பேர்கள் இருக்கும் போது, லக்ஷ்மணபுரியிலிருந்து புரொபஸர் அலீமைத்தானா கொண்டுவர வேண்டும்!" என்று நானுமே யோசித்துக் கொண்டிருந்தேன். டாக்டர் அலீம் பேசி முடிந்ததும் என்னுடைய மேற்படி அபிப்பிராயத்தை அடியோடு மாற்றிக் கொண்டேன். காரணம்:—

1. புரொபஸர் அலீம் வடக்கேயிருந்து வந்திருந்தபோதிலும் தமிழ் நாட்டையும், பாரதியாரையும் பற்றி நன்கு அறிந்தவராயிருந்தார்.

2. தமிழ் நாட்டு மாணவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த அவர் அவ்வப்போது முகத்தில் புன்சிரிப்புத் தோன்றச் சிரக்கம்பம் செய்து கொண்டிருந்தார்.


தோழர் ஸ்ரீ பிரசாந்த ஸன்யால்

3. மகா நாட்டுக்குத் தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் விஜயம் செய்திருந்த பல கட்சி மாணவர்களும் ஒன்று பட்ட ஐக்கிய பாவத்துடன் தலைவர்கள் விடுதலை, தேசிய சர்க்கார் அமைப்பு முதலிய தீர்மானங்கள் நிறைவேற்றியதை அவர் நேரில் பார்த்துக் கொண்டிருந்தார்.

எனவே, "தமிழ் நாட்டு மாணவர்கள் ஒன்று பட்டு நிற்கிறார்கள். தேச சுதந்திரத்துக்காகவும், தலைவர்களின் விடுதலைக்காகவும் அவர்கள் பாடுபடு

கிறார்கள்" என்று நாளைக்கு வடக்கே போய் அவர் தமிழ் நாட்டைப் பற்றிப் பெருமையாகப் பிரசாரம் செய்வாரல்லவா?

இரண்டாம் நாள் ஞாயிற்றுக்கிழமையன்று மகாநாடு ஆரம்பமாகு முன் தமிழ் விவாதப் போட்டி ஒன்று ஏற்படுத்தியிருந்தனர். "பாகிஸ்தான் இந்திய சுதந்திரத்துக்கு முரணானதா?" என்பது விஷயம். விவாதத்தில் சுமார் இருபது மாணவர்கள் கலந்து கொண்டனர். தலைக்கு நான்கு நிமிஷ நேரம் பேசினார்கள்.

இதில் திருச்சி நாகராஜனுக்கு முதல் பரிசும், நாகை கோவிந்தராஜனுக்கு இரண்டாவது பரிசும், அண்ணாமலை நகர் சர்மாவுக்கு மூன்றாவது பரிசும் கிடைத்தன.

திருச்சி நாகராஜன் பேச்சை நான் என்றென்றைக்கும் மறக்க முடியாது. பதினாறு வயது கூட நிரம்பாத இச்சிறுவனுடைய பேச்சு சபையைப் பேச்சு மூச்சில்லாமல் அடித்து விட்டது. அவனுடைய பிரசங்கத்தில் விஷயம், பேச்சுத் தெளிவு, ஹாஸ்யம், கம்பீரம் எல்லாம் கலந்திருந்தன. புஜங்களை சிலிர்த்திக் கைகளை உயர்த்தி வாசாமகோசரமாய்ப் பேசினான்.


திருச்சி நாகராஜன்

இரண்டாவது பரிசு பெற்ற கோவிந்தராஜன் என்ற சிறுவனுடைய பேச்சும் கவர்ச்சிகரமாகவே இருந்தது. "நான் அறிவிலும் உருவிலும் சிறியவன்" என்று அவன் அடக்கத்துடன் சொல்லிக் கொண்ட போதிலும் அறிவில் பெரியவனாகவே காட்டிக் கொண்டான்.

விவாதப் போட்டியில் கலந்து கொண்டவர்களைத் தவிர மகாநாட்டில் பல மாணவத் தோழர்கள் பேசினர். தோழர் சங்கரய்யாவின் பேச்சுத்தான் மற்ற எல்லாருடைய பேச்சுக்கும் சிகரம் வைத்தது போல் இருந்தது. இவருடைய பேச்சில் நிதானமும், தெளிவும் பிரதான அம்சங்களாகும். துளிக்கூட அலுப்புத் தட்டாமல் மணிக்கணக்கில் பேசுகிறார். மகாநாடு வெற்றிகரமாகவும் அமோகமாகவும் நடந்ததற்குக் காரியதரிசிகளான தாமோதரமும், சங்கரனும் எடுத்துக் கொண்ட பிரயாசை எத்தனை முக்கியமோ, அவ்வளவுக்கு சங்கரய்யாவினுடைய பேச்சும் முக்கிய காரணமாகும்.

விவாதத்துக்குப் பின் தீர்மானங்கள் யாவும் நிறைவேறின பிறகு உள்ளூர் காங்கிரஸ் தலைவர் டாக்டர் ராஜன் அவர்களுடைய பிரசங்கம் ஆரம்பமாயிற்று. தமது பிரசங்கத்தில் அவர் "மாணவர்களுக்குள்ளே ஒற்றுமை இல்லையென்றால் நாட்டில் பிளவுபட்டு நிற்கும் பல்வேறு அரசியல் கட்சித் தலைவர்கள் தங்கள் கட்சிக்குச் சாதகமாக மாணவர்களை உபயோகித்துக் கொள்வார்கள். அதற்கு மாணவர்கள் ஒருபோதும் இடம் தரக் கூடாது" என்று எச்சரித்தார்.

மகாநாடு முடிந்ததும் காரியதரிசி தாமோதரம், மாணவர்கள் எழுதியிருந்த சித்திரக் காட்சியைக் காணவேண்டுமென்று எங்களை அழைத்தார். சித்திரக்காட்சி என்று தனியாக ஒரு காட்சி இருக்கிற விஷயம் எனக்கு அப்போதுதான் தெரியவந்தது. ஏனெனில், ஏற்கெனவே கொட்டகைக்குள் பல படங்கள் மாட்டப்பட்டிருந்தன. நாடக ஆசிரியர் சங்கரதாஸ்வாமிகள், கந்தசாமி முதலியார், ஔவையார் முதலியவர்களின் படங்களெல்லாம் மாட்டப்பட்டிருந்தன. அவற்றையெல்லாம் பார்த்து விட்டு, "போயும் போயும் மாணவர்கள் இந்தப் படங்களையெல்லாம் ஏன் எழுதி வைக்க வேண்டும்?" என்று எனக்கு நானே சிரித்துக் கொண்டிருந்தேன்.

பிறகு தாமோதரம் வந்து அழைத்ததும்தான் விஷயம் விளங்கிற்று. கொட்டகையில் மாட்டப்பட்டிருந்த படங்களெல்லாம் அந்தக் கொட்டகையில் நடந்து கொண்டிருந்த நாடகத்தின் சொந்தக்காரர்கள் (டி. கே. எஸ். சகோதரர்கள்) மாட்டி வைத்திருந்த படங்கள் என்பதாக அப்போதுதான் அறிந்து கொண்டேன்.

அப்புறம் தனியாக இருந்த * சித்திரக் காட்சிகளையெல்லாம் பார்த்தானதும் "இரவு கலை விழா நடக்கிறது; அதற்கு அவசியம் வரவேண்டும்" என்று தோழர் தாமோதரம் கேட்டுக் கொண்டார். ஆனால் கலை விழா ஆரம்பமாகுமுன் நடந்து கொண்டிருந்த பொதுக் கூட்டம் சீக்கிரத்தில் கலைவதாயில்லை. எனவே, நானும் சாமாவும் பொதுக் கூட்டத்திலிருந்து கலையும் விழாவை நடத்தி விட்டு ரயிலுக்கு வந்து சேர்ந்தோம். தமிழ் மாணவர்கள் சம்மேளன மகாநாடு இவ்வளவு சிறப்பாகவும், வெற்றிகரமாகவும் நடந்ததை உத்தேசித்து அந்த மகாநாட்டுக்கு ஒரு ஜிந்தாபாத் கூறுகிறேன். ஜிந்தாபாத் மாணவர் சம்மேளனம்! ஜிந்தாபாத் தமிழ் மாணவர் மகாநாடு!!

* சித்திரக் காட்சியில் வைத்திருந்த படங்களில் சில அடுத்த இதழில் வெளியாகும்.

# சிவகாமியின் சபதம்

## அத்தியாயம் 52

## சக்கரவர்த்தி தூதன்

காஞ்சி நகருக்குள் வந்த பல்லவர் படையைத் திரும்ப வெளியே கொண்டு போய் வாதாபி சைன்யத்துடன் போரிட வேண்டுமென்னும் கருத்தைக் குமார சக்கரவர்த்தி அழுத்தந் திருத்தமாக வெளியிட்டு விட்டு, சபையில் கூடியிருந்தவர்களைப் பார்த்து, "உங்கள் அபிப்பிராயம் என்ன? எல்லாருக்கும் சம்மதந்தானே?" என்று கேட்டார்.

சபையில் எல்லாருடைய முகத்திலும் திகைப்பின் அறிகுறி காணப்பட்டது. சற்று நேரம் நிச்சப்தம் குடிகொண்டிருந்தது.

உண்மை யென்னவென்றால், அங்கே கூடியிருந்தவர்கள் யாரும் யுத்தம் சம்பந்தமாக அபிப்பிராயம் கூறுவதற்காக வரவில்லை. மகேந்திர சக்கரவர்த்தியின் விருப்பத்தையும் ஆக்ஞையையும் தெரிந்து கொள்வதற்காகவே வந்திருந்தார்கள். பல்லவ சாம்ராஜ்யத்துக்கு நேர்ந்துள்ள மகத்தான அபாயத்தைத் தடுத்து இராஜ்யத்தைக் காப்பாற்றக் கூடிய சக்தி மகேந்திர சக்கரவர்த்திக்கு உண்டு என்று அவர்கள் பூரணமாய் நம்பியதோடு, இந்த நிலைமையில் அவருக்குத் தாங்கள் சொல்லக்கூடிய யோசனை ஒன்றுமில்லையென்றும், வீண் ஆட்சேபங்களைக் கிளப்பி அவருக்குத் தொந்தரவு கொடுக்காமலிருந்தால் அதுவே பெரிய உதவி என்றும் அனைவரும் கருதினார்கள்.

ஒன்பது மாதத்துக்கு முன்னால் சக்கரவர்த்தி வடக்குப் போர்க்களம் போனபோது அவர்கள் மேற்படி கொள்கையையே அனுஷ்டித்துச் சக்கரவர்த்தியின் இஷ்டப்படி செய்ய அதிகாரம் அளித்தார்கள். இப்போதும் அதே உறுதியுடன்தான் அவர்கள் கூடியிருந்தார்கள்.

விஷயம் இப்படியிருக்க, மாமல்லர் திடீரென்று எதிர் பாராத விதமாக ஒரு பெரிய, அபாயகரமான காரியத்தைச் செய்யப் போவதாகச் சொல்லவே, எல்லாரும் மனக் குழப்பத்தில் ஆழ்ந்து, இன்னது சொல்வதென்று தெரியாமல் சும்மா யிருந்தார்கள்.

மாமல்லர் எல்லாருடைய முகங்களையும் ஒரு தடவை கண்ணோட்டம் செலுத்திப் பார்த்து விட்டு, "ஏன் எல்லாரும் மறுமொழி சொல்லாமலிருக்கிறீர்கள்? இது என்ன மௌனம்? உங்கள் முன்னிலையில் சொல்லத் தகாத வார்த்தை எதையேனும் நான் சொல்லி விட்டேனா? தொண்டைமான் இளந்திரையன் காலத்திலிருந்து வாழையடி வாழையாக வந்திருக்கும் வீர பல்லவ குலத்துக்கு இழுக்குத் தரும் காரியம் எதையேனும் நான் கூறினேனா?" என்று கம்பீரமாய்க் கேட்டார்.

மீண்டும் அச் சபையில் மௌனம் தான் குடிகொண்டது. பெரியதொரு தர்ம சங்கடத்தில் தாங்கள் அகப்பட்டுக் கொண்டிருப்பதாக ஒவ்வொருவரும் உணர்ந்து வாய் திறவாமல் இருந்தார்கள்.

"நல்லது; உங்களில் ஒருவரும் ஆட்சேபியாத படியினால், என்னுடைய யோசனையை ஒப்புக் கொள்கிறீர்கள் என்று ஏற்படுகிறது. சேனாபதி! அப்

படித்தானே?" என்று மாமல்லர் சேனாபதி கலிப்பகையாரைக் குறிப்பாகப் பார்த்துக் கேட்டார்.

அப்போது சேனாபதி கலிப்பகையார் எழுந்து "குமார சக்கரவர்த்தியின் கட்டளை எதுவோ, அதன்படி நடக்க நான் கடமைப்பட்டவன். ஆனால் அது யுக்தமானது என்று என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. மாமல்லர் கூறுவது சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்துக்கு மாறானது. எவ்வளவோ தீர்க்காலோசனையின் பேரில் பல்லவேந்திரர் நமது பல்லவ சைன்யத்தைக் கோட்டைக்குள் கொண்டு வந்து சேர்த்திருக்கிறார். மகேந்திர சக்கரவர்த்தி கோழை அல்ல; போருக்குப் பயந்தவர் அல்ல. சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்துக்கு மாறாக நாம் எதுவும் செய்வது உசிதமல்ல" என்றார்.

குமார சக்கரவர்த்தியின் முகத்தில் ஆத்திரம் கொதித்தது.

"சேனாபதி! ஜாக்கிரதை! என்னுடைய வீரத் தந்தையைக் கோழை என்றோ, பயந்தவர் என்றோ நான் சொன்னேனா? அதைக் காட்டிலும் என் நாவை அறுத்துக் கொள்வேன்! என் தந்தையின் யுத்த தந்திரம் வேறு; என்னுடைய யுத்த தந்திரம் வேறு. அவர் இல்லாதபோது என்னுடைய யுத்த தந்திரத்தை அனுசரிக்க எனக்குப் பாத்தியதை உண்டு. சேனாபதி! உடனே புறப்படுங்கள். பல்லவ சைன்யம் நாளைச் சூரியோதயத்தில் யுத்த சந்நத்தமாகக் கிளம்ப ஆயத்தம் செய்யுங்கள்!"

சேனாபதி கலிப்பகையார், சற்றுத் தணிந்த குரலில் "பல்லவ குமாரரின் தந்திரம் யுத்த தந்திரம் அல்ல; தற்கொலைத் தந்திரம். வாதாபி படையில் ஐந்து லட்சம் போர் வீரர்கள் இருக்கிறார்கள். பல்லவ வீரர்கள் லட்சம் பேருக்கு மேல் இல்லை......" என்றார்.

மாமல்லர் கண்களில் தீப்பொறி பறக்க, "சேனாபதி! புள்ளலூர்ப் போர்க்களத்தில் பல்லவவீரர் எத்தனை பேர், கங்க பாடி வீரர் எத்தனை பேர் என்று தெரியுமா? பல்லவர்கள் பதினாயிரம் பேர்; கங்கர்களோ ஐம்பதினாயிரம் பேர். ஆனாலும் அந்த ஐம்பதினாயிரம் பேரைப் புறங்காட்டி ஓடும்படி நமது பதினாயிரம் வீரர்கள் செய்யவில்லையா? போர்க்களத்திலே ஆள் கணக்கா பெரிது? வெற்றியளிப்பது வீரமல்லவா? பல்லவ வீரன் ஒவ்வொருவனும் சளுக்க வீரன் ஒன்பது பேருக்காவது ஈடாவான். கலிப்பகையாரே! இதைத் தாங்கள் இன்னும் அறிந்து கொள்ளவில்லையா?"

"வாதாபி சைன்யத்தில் ஐந்து லட்சம் வீரர்கள் மட்டுமில்லை; பதினாயிரம் போர் யானைகள் இருக்கின்றன!" என்றார் கலிப்பகை.

"இருந்தால் என்ன? நமது வீர தளபதி பரஞ்சோதியின் கை வேலுக்கு அஞ்சி, மதம் பிடித்த யானை இதே காஞ்சி நகரின் வீதிகளில் தெறிகெட்டு ஓடியது நமது சேனாபதிக்குத் தெரியாதுபோலிருக்கிறது. தளபதி பரஞ்சோதியைப் போன்ற ஒரு லட்சம் வீர சிங்கங்கள் பல்லவ சைன்யத்தில் இருக்கும்போது, புலிகேசியின் யானைகளுக்கு நாம் ஏன் அஞ்ச வேண்டும்? சேனாபதி! ஒன்று செய்யலாம். தாங்கள் கோட்டைக் காவலை ஏற்றுக் கொள்ளுங்கள். நானும் தளபதி பரஞ்சோதியும் போர்க்களம் செல்கிறோம்......"

விவாதம் இவ்விதம் முற்றிக் கொண்டிருப்பதைக் கண்ட முதல் மந்திரி சாரங்கதேவர் பெரிதும் கவலையடைந்தார். பெரியவர் எழுந்து நின்றதும் மாமல்லர் பேச்சை நிறுத்தினார்.

"ஒரு விஷயம் நாங்கள் தெரிந்து கொள்ள விரும்புகிறோம். சக்கரவர்த்தி இன்னமும் வந்து சேரக் கூடுமல்லவா? இது விஷயம் கோட்டை வாசல் காவலர்களுக்கு அறிவிக்கப்பட்டிருக்கிறதா? சக்கரவர்த்தி இன்றிரவு ஒரு வேளை வந்தால் கோட்டைக் கதவைத் தாமதமின்றித் திறக்கக் காவலர்கள் ஆயத்தமாயிருக்கிறார்களா?" என்று முதல் மந்திரி வினாவினார்.

அப்போது தளபதி பரஞ்சோதி, "ஆம்; அப்படித்தான் கட்டளையிட்டிருக்கிறேன். சக்கரவர்த்தி ஒரு வேளை தூதர் மூலமாகச் செய்தி அனுப்பக் கூடுமென்று எதிர்பார்த்து அதற்கும் தக்க ஏற்பாடு செய்திருக்கிறேன்" என்றார்.

தளபதி பரஞ்சோதி இவ்விதம் சொல்லி வாய் மூடுவதற்குள் மண்டபத்தின் வாசற் காவலன் ஒருவன் விரைந்து உள்ளே வந்து, "சக்கரவர்த்தியிடமிருந்து தூதன் வந்திருக்கிறான். சிங்க இலச்சினையுடன் வந்திருக்கிறான்!" என்று தெரிவித்தான்.

இதைக் கேட்ட மாமல்லர் திகைத்துப் போய் நின்றார். சபையில் இருந்த மற்றவர்கள் எல்லாரும், மிகவும் நெருக்கடியான சமயத்தில் தெய்வமே தங்கள் துணைக்கு வந்தது என்று எண்ணியவர்களாய் மனத்திற்குள் உற்சாகமடைந்தார்கள்.

## அத்தியாயம் 53

# பயங்கரச் செய்தி

சக்கரவர்த்தியின் தூதன் சபா மண்டபத்துக்கு உள்ளே வந்தபோது சபையில் நிச்சப்தம் நிலவியது.

வந்தவன் நெடிதுயர்ந்த ஆஜானுபாகுவான தோற்றமளித்தான். போர்க்களத்திலிருந்து நேராக வந்தவனாகக் காணப்பட்டான். அவன் தலையிலும், முகத்திலும் காயங்களுக்குக் கட்டுக்கள் போடப்பட்டிருந்தன. கட்டியிருந்த துணிகள் இரத்தக் கறையினால் சிவந்திருந்தன.

என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறானோ என்ற ஆவலானது எல்லாருடைய மனதிலும் குடிகொண்டு வேறு வகை எண்ணங்களுக்கே இடமில்லாமல் செய்தது. சபையிலிருந்த முப்பது பேருடைய அறுபது கண்களும் இமை கொட்டாமல் அத்தூதனை நோக்கின.

அப்படிப் பார்த்தவர்களில் தளபதி பரஞ்சோதியும் ஒருவர் என்று சொல்ல வேண்டியதில்லை. மற்றவர்களுடைய மனதில் குடிகொண்டிருந்த ஆவல் அவருடைய மனதிலும் இருந்ததாயினும், அதோடு இன்னொரு வகை வியப்பும் அவர் மனதில் ஊசலாடியது. அது, இந்தத் தூதனை எங்கேயோ பார்த்திருக்கிறோம் என்ற உணர்ச்சிதான்.

தூதன், சபையில் உள்ளவர்களையெல்லாம் ஒரு தடவை சுற்றி வளைத்துப் பார்த்தான். கடைசியில் அவனுடைய கண்கள் குமார சக்கரவர்த்தியின் முகத்திற்கு வந்து அங்கேயே ஸ்திரமாக நின்றன.

"பல்லவ குமாரா! தங்கள் தந்தையிடமிருந்து மிக முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறேன். இதோ சிங்க இலச்சினை! செய்தியை இந்தச் சபையிலேயே சொல்லலாமல்லவா?" என்று கேட்டான்.

ஆஹா! இந்தக் குரலை நாம் எங்கேயோ கேட்டிருக்கிறோமல்லவா? — என்று பரஞ்சோதி திகைத்தார். அவர் மனதில ஒரு விபரீதமான சந்தேகம் தோன்றியது. அப்படியும் இருக்க முடியுமா என்று அதிசயித்தார்.

தூதன் மேற்கண்ட விதமாகக் கேட்டதும், மாமல்லர் முதன் மந்திரியின் முகத்தைப் பார்த்தார்.

அந்தக் குறிப்பையறிந்த சாரங்கதேவ பட்டர், "சக்கரவர்த்தியின் செய்தியை இங்கேயுள்ளவர்கள் அனைவரும் அறிந்துகொள்ள வேண்டியதுதான்! இங்கேயே தாராளமாகச் சொல்லலாம்!" என்றார்.

"அப்படியானால் கேளுங்கள். நான் கொண்டு வந்திருக்கும் செய்தி மிகப் பயங்கரமானது. அதைச் சொல்வதற்கே எனக்குத் தயக்கமாயிருக்கிறது. ஆயினும் சொல்லியே தீர வேண்டும்...... பல்லவ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி, — மகேந்திர பல்லவர், சிறைப்பட்டார்!......"

களங்கமற்ற ஆகாசத்திலிருந்து திடீரென்று பேரிடி விழுந்தால் எப்படியிருக்குமோ அப்படியிருந்தது அச் சபையிலிருந்தவர்கள் அனைவருக்கும்.

சிலர் "என்ன? என்ன?" என்று அலறினார்கள். சிலர் ஆசனத்திலிருந்து குதித்து எழுந்தார்கள். சிலர் திறந்த வாய் மூடாமல் திகைத்த பார்வையுடன் தூதனைப் பார்த்தவண்ணமிருந்தார்கள்.

மாமல்லர் பயங்கரமான ஒரு சிரிப்புச் சிரித்தார். அது சபையிலிருந்த

அனைவருக்கும் மயிர்க் கூச்சை உண்டாக்கிற்று.

"சக்கரவர்த்தி சிறைப்பட்டாரா? எப்படி? எப்போது? யார் சிறைப் படுத்தினார்கள்? சீக்கிரம் சொல்!" என்று மாமல்லர் கர்ஜித்தார். அவருடைய கரம் தன்னை யறியாமல் உடை வாளை உருவியது.

"வாதாபி சைன்யத்தின் முன்னணிப் படையினால் சிறைப் படுத்தப் பட்டார். நேற்று மாலையில்தான்! தெற்கேயிருந்து திரும்பியவர் வாதாபி சைன்யத்தின் நிலையை அறிந்து கொள்வதற்காக நேரே வடதிசை சென்றார். போன இடத்தில் எதிர்பாராத விதமாக வாதாபி வீரர்களால் சிறைப் படுத்தப் பட்டார். பல்லவ குமாரா! சக்கரவர்த்தி என்னிடம் தங்களுக்குச் சொல்லி யனுப்பிய செய்தி இதுதான்:—என் மகன் தன்னுடைய இணையில்லா வீரத்தைக் காட்ட வேண்டிய சந்தர்ப்பம் வந்துவிட்டது; வாதாபி சைன்யத்தை முறியடித்துப் புலிகேசியைக் கர்வபங்கம் செய்து என்னை விடுதலை செய்யவேண்டிய பொறுப்பு என் வீர மகனைச் சேர்ந்தது! அவனுக்கு இது அசாத்தியமான காரியமல்ல! — இந்தச் செய்தியைத் தான் தங்கள் தந்தையிட மிருந்து நான் கொண்டு வந்தேன்......"

மாமல்லர் அப்போது சபையிலிருந்தவர்கள் அனைவரையும் ஒரு



தடவை கண்களில் அக்னி ஜுவாலை எழும்படி பார்த்து விட்டு, "சேனாபதி! இப்போதாவது நமது படைகளைக் கோட்டைக்கு வெளியே கொண்டு போகச் சம்மதிப்பீரா? மந்திரிகளும் அமைச்சர்களும் என்ன சொல்கிறீர்கள்? கோட்டத் தலைவர்களின் அபிப்பிராயம் என்ன?" என்று இடி முழக்கம் போன்ற குரலில் கேட்டு விட்டு, தமக்குப் பின்னால் நின்ற தளபதி பரஞ்சோதியைத் திரும்பிப் பார்த்து, "தளபதி! நீர் கூட ஏன் இப்படி ஸ்தம்பித்து நிற்கிறீர்? எல்லாரும் அசையாத சடப் பொருள்கள் ஆகி விட்டீர்களா?" என்றார்.

அப்போது முதல் அமைச்சர் எழுந்து, "இந்தத் தூதன் சொல்வது நிஜம் என்பதற்கு என்ன ஆதாரம்?" என்று வினவினார்.

தூதன் உடனே கையிலிருந்த சிங்க இலச்சினையைக் காட்டி, "இதுதான் ஆதாரம்; என் முகத்திலும் உடம்பிலும் உள்ள காயங்கள்தான் அத்தாட்சி!" என்றான்.

"ஆஹா! மகேந்திர சக்கரவர்த்தி பகைவர்களின் கையில் சிக்கிக் கொண்டிருக்கிறார். நீங்கள் ஆதாரம் கேட்டுக் கொண்டு காலங் கடத்துகிறீர்கள் அல்லவா! நல்ல காரியந்தான்! தளபதி! வாரும், நாம் போகலாம்!" என்று மாமல்லர் பரஞ்சோதியைப் பார்த்துச் சொன்னார்.

ஆனால், பரஞ்சோதி ஏதோ ஒரு மனக் குழப்பத்தில் ஆழ்ந்தவராய்க் காயக் கட்டுக்களுடன் நெடிதுயர்ந்து நின்ற தூதரின் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.



முதல் மந்திரி சாரங்க தேவ பட்டர், "இந்தத் தூதனை இதற்கு முன்னால் நம்மில் யாராவது பார்த்ததுண்டா? தூதா! நீ யார்?" என்று கேட்க, தூதன் கூறினான் :—

"நான் யாரா? பல்லவ சக்கரவர்த்தியின் அந்தரங்க ஒற்றன். பல்லவ ஒற்றர் படையில் சத்ருக்னருக்கு அடுத்தவன். தளபதி பரஞ்சோதி என்னைப் பார்த்திருக்கிறார்! தளபதி! என்னைத் தெரியவில்லையா? இந்தக் காஞ்சி நகருக்கு உம்மை அழைத்துவந்த நாகநந்தியடிகள் நான்தான் என்று தெரியவில்லையா? ஆயனரும் அவர் மகளும் தெரிந்தோ தெரியாமலோ வாதாபி அரசனுக்கு ஒற்று வேலை செய்வதாகச் சந்தேகித்துச் சக்கரவர்த்தி என்னை அவர்களுக்குக் காவலாகப் போட்டார். ஆயனர் புலிகேசிக்குக் கொடுத்த இரகசிய ஓலையை இந்தப் பிள்ளையாண்டான் எடுத்துக்

கொண்டு நாகார்ஜுன மலைக்குக் கிளம்பினான். சக்கரவர்த்திக்கு அதை நான் தெரியப்படுத்தியதின் பேரில், அந்த ஓலையைச் சக்கரவர்த்தி இவனிடமிருந்து பறித்துக் கொண்டார். தளபதி! இதெல்லாம் உண்மையா, இல்லையா?"

தளபதி பரஞ்சோதியின் தலை சுழன்றது. அவரால் பேசவே முடியவில்லை. சில சில விஷயங்களை எண்ணிப் பார்க்கும்போது, ஒரு வேளை அத்தூதன் கூறியது உண்மையாயிருக்கலாமென்று தோன்றியது.

மாமல்லரோ திடீரென்று விஷநாகத்தினால் தீண்டப் பெற்று விஷம் இருதயப் பிரதேசத்துக்கு ஏறியவரைப் போல் ஆனார். அவருடைய நெஞ்சில் ஏக காலத்தில் ஆயிரம் வேல்கள் பாய்வது போலிருந்தது.

தூதன் மேலும் சொன்னான்:— "ஆயனருடன் குண்டோதரன் என்ற பெயருடன் வாதாபி ஒற்றன் ஒருவன் இருந்து வந்தான். அவன் நேற்று ஆயனருடைய செய்தியுடன் வாதாபி சைன்யத்தைச் சந்திப்பதற்காகச் சென்றான். அவனைத் தடுப்பதற்காகச் சக்கரவர்த்தியும் நானும் தொடர்ந்து போனபோதுதான் இந்த விபத்து நேரிட்டது. கடவுள் அருளால் நான் தப்பி வந்தேன். அவ்வளவுதான் விஷயம். சக்கரவர்த்தி இன்னும் சில பணிகளை எனக்கு இட்டிருக்கிறார். அவற்றை நிறைவேற்றுவதற்கு நான் சத்ருக்னரைத் தேடிப் போக வேண்டும். விடை கொடுங்கள்! நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். நன்கு ஆலோசித்து எது உசிதமோ அவ்விதம் செய்யுங்கள்!"

இவ்வாறு கூறிவிட்டு, நாகநந்தியடிகளாகிய சக்கரவர்த்தியின் தூதன் சபா மண்டபத்தை விட்டு வெளியே சென்றான். மேலும் அவனை ஏதேனும் கேட்கவோ, அவனைத் தடுத்து நிறுத்தவோ, யாருக்கும் தோன்றவில்லை.

சபையிலிருந்த அனைவரும் கல்லாய்ச் சமைந்திருந்தார்கள்.

மாமல்லரின் நெஞ்சில் ஆயிரந் தேள்கள் கொட்டிக் கொண்டிருந்தன! ஆகா! ஆயனரும் அவர் மகளும் வாதாபிக்கு ஒற்று வேலை செய்கிறார்களா? அந்த ஆயனரையும் சிவகாமியையுமா நாம் வெள்ளத்திலிருந்து காப்பாற்றினோம்? அந்தச் சிவகாமியிடமா நாம் எல்லையில்லாக் காதல் வைத்தோம்? அவர்களாலேயா இப்போது மகேந்திர பல்லவர் பகைவர்களிடம் சிறைப்பட்டிருக்கிறார்?......

அந்தச் சபையில் இருந்தவர்களில் அப்போது மாமல்லரின் மனவேதனையை அறிந்து கொள்ளக் கூடியவர் தளபதி பரஞ்சோதி ஒருவர்தான் இருந்தார். அவர் மாமல்லரின் கரத்தைப் பற்றிக் கொண்டு, "இன்னும் என்ன யோசனை! வாருங்கள், போர்க்களத்துக்குப் புறப்படலாம்! அந்த வாதாபி ராட்சதர்களைக் கதறக் கதற முறியடித்துச் சக்கரவர்த்தியை மீட்டுக் கொண்டு வரலாம்! மாமல்லரே! புள்ளலூர்ச் சண்டையை நினைவு கூருங்கள்!" என்றார்.

அப்போது சேனாபதி கலிப்பகையாரும் பிரமையிலிருந்து விடுபட்டவராய், "ஆம்; தளபதி கூறுவது நியாயந்தான். இனி யோசிப்பதற்கு ஒன்றும் இல்லை. படை கிளம்ப உடனே கட்டளையிடுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டு எழுந்தார்.

சபையிலிருந்து அத்தனை பேரும் ஏக காலத்தில் எழுந்து நின்று, "மகேந்திர பல்லவர் வாழ்க!" "அரக்கன் புலிகேசி அழிக!" என்று பல வகையான கோஷங்களைச் செய்தார்கள்.

இந்த கோஷங்களுக்கு இடையில் சபா மண்டபத்தின் வாசலிலும் ஏதோ குழப்பமான சத்தங்கள் எழுந்தன. குதிரையின் காலடிச் சத்தம், வேல்களும் வாள்களும் உராயும் சத்தம், அதிகாரக் குரலில் யாரோ கட்டளையிடும் சத்தம், தடதட வென்று பலர் நடமாடும் சத்தம் — இவை எல்லாம் கலந்து வந்தன.

ஆம்; அச்சமயத்தில் சபா மண்டபத்தின் வாசலில் ஒரு முக்கியமான சம்பவம் நடந்து கொண்டுதானிருந்தது. சக்கரவர்த்தி சிறைப்பட்ட செய்தியைக் கொண்டு வந்த தூதன் மண்டபத்தின் வாசலுக்கு வந்தபோது, அவ்விடம் குதிரை மீது ஆரோகணித்து சாக்ஷாத் மகேந்திர பல்லவரே வந்து சேர்ந்தார். மண்டபத்தின் வாசலில் காவல் செய்த வீரர்களைப் பார்த்து, அந்தத் தூதனைப் பிடித்துச் சிறைப் படுத்தும்படி சக்கரவர்த்தி கட்டளையிட, வீரர்கள் அவனை நாலாபுறமும் சூழ்ந்து கொண்டார்கள்!



# சோதிடந் தேவையில்லை

சமீபத்தில் விலைவாசிகள் உயருமா குறையுமா என்பதுபற்றி யாரும் உங்களுக்குச் சோதிடம் சொல்லவேண்டியதில்லை. 1943-ம் வருஷ அநுபவத்திலிருந்து, விலைவாசிகள் கண்டிப்பாகக் குறையுமென்று அனைவருக்கும் தெளிவாய்த் தெரியும். எங்கு பார்த்தாலும் விலைவாசிகள் குறைவதற்கான அறிகுறிகள் தோன்றுகின்றன. விலைவாசிகளைக் கட்டுப்படுத்தியதனாலும், கொள்ளை லாபமடிக்கிறவர்கள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டதனாலும்தான் இந்த நிலைமை ஏற்பட்டது. விலைவாசிகளின் குறைவு உங்களைப் பாதிக்காதபடி காப்பாற்றிக் கொள்ளுங்கள்.

உங்களுடைய பணத்தை செய்பொருட்கள், பண்டங்கள், நிலம், கட்டடங்கள், நகைகள் முதலியவற்றில் முடக்க இதுவல்ல சமயம். நாட்செல்லச் செல்ல அவற்றின் விலைகள் கட்டாயம் குறையும். இப்போது ரூபாய் 100-க்கு வாங்கும் ஒரு பொருளின் விலை, இன்னும் ஒரு வருஷத்தில், ரூபாய் 70-க்கும் குறைவாக ஆகிவிடும். இக்காலத்திற்கு, இன்ஷியூரன்ஸ், கூட்டுறவு சங்கங்கள், சேமநிதி, தபாலாபீஸ் சேமநிதி, அரசாங்கக் கடன் பத்திரங்கள், நேஷனல் சேவிங்ஸ் செர்டிபிகேட் ஆகியவையே தலைசிறந்த முதலீடுகளாகும்.

## உங்களால் இயன்றவரை மிச்சப் படுத்துங்கள்.

னி, தேசிலும் செய்யப்பட்ட பொருட்கள், துணிமணிகள், மருந்துகள், உணவுப் பொருட்கள் முதலியவற்றின் விலைகள் குறைகின்றன. கட்டுப்பாடு விதிகள் பெருக்கப்பட்டு கண்டிப்பாக அமுல் நடத்தப்படுகின்றன. விலைவாசிகள் இன்னும் குறைவது நிச்சயம்.

## மிச்சப் படுத்தியதை முதலீடு செய்யுங்கள்.

**தேசியப் போர்முனையார் விடுக்கும் தேசிய வேண்டுகோள்**

AAA 1115 TM




# பார்த்தசாரதி

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

**பா**ண்டவர்கள் சமாதானப் பேச்சுப் பேசி முடிப்பதற்காக ஹஸ்தினாபுரத்துக்குத் தூதரைப் போகச் சொல்லிவிட்டுத் தங்கள் பக்ஷத்தில் இருக்கக்கூடிய அரசர்களுக்கெல்லாம் படைகளைத் திரட்டித் தயாரிக்கும்படி சொல்லியனுப்பினார்கள். துவாரகைக்கு அருச்சுனனே நேரில் சென்றான்.

தன்னுடைய ஒற்றர்களால் விஷயங்களை யறிந்துகொண்ட துரியோதனனும் சும்மா இருக்கவில்லை. வாசுதேவன் ஊருக்குத் திரும்பினான் என்பதை அறிந்து வேகமான குதிரைகளைப் பூட்டிய ரதத்தில் துவாரகை சென்றான். இருவரும் ஒரே தினத்தில் துவாரகை வந்து சேர்ந்தார்கள்.

கிருஷ்ணன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். நெருங்கிய உறவினர்களானபடியால் இருவரும் கிருஷ்ணன் படுத்திருந்த அறைக்குள் சென்று அவன் எழுந்திருப்பதற்காகக் காத்திருந்தார்கள். முதலில் உள்ளே பிரவேசித்த துரியோதனன் கிருஷ்ணனுடைய சமீபத்தில் தலைப்பக்கத்தில் ஒரு சிறந்த ஆசனத்தில் உட்கார்ந்தான். பின்னால் வந்த அருச்சுனன் காலண்டை கைகூப்பிக் கொண்டு நின்றான்.

மாதவன் நித்திரை தெளிந்ததும் எதிர் நின்ற அருச்சுனனை முதலில் பார்த்து அவனுக்கு நல்வரவு சொன்னான். பிறகு திரும்பிப் பார்த்து ஆசனத்தில் வீற்றிருந்த துரியோதனனை வரவேற்று அவனையும் க்ஷேம சமாசாரம் விசாரித்தான். "என்ன காரியம்? இருவரும் ஏன் வந்தீர்கள்?" என்று கேட்டான். துரியோதனன் முதலில் பேசினான்.

"இப்போது எங்களுக்குள் யுத்தம் வரும் போலிருக்கிறது. வந்தால் நீர் எனக்கு உதவி செய்யவேண்டும். நானும் அருச்சுனனும் இருவரும் உம்மிடத்தில் சமமான பிரியம் பெற்றிருக்கிறோம். நம்முடைய உறவு முறையும் சமானமாகத்தான் இருக்கிறது. ஒருவன் அதிகம் ஒருவன் குறைவு இல்லை. இப்போது உம்மிடத்தில் நான் முந்தி வந்தவனாக இருக்கிறேன். பெரியோர்களுடைய பழைய ஆசாரம் முன்னால் வந்தவனை ஆதரிக்க வேண்டும். பெரியோர்களுக்குள் நீர் சிறந்து விளங்குகிறீர், ஜனார்த்தனா! எல்லாருக்கும் மார்க்கம் காட்டுபவ

ராக இருக்கிறீர். பெரியோர்கள் நடத்தி வந்த தரும நெறியை ஊர்ஜிதப்படுத்து வீரா. நான் முந்தி வந்தவன்" என்று சொன்னான்.

திருதராஷ்டிர புத்திரன் சொன்னதைக் கேட்ட புருஷோத்தமன், "நீ முதலில் வந்தாய் என்பது உண்மையாகவே இருக்கலாம். ஆனால் அரசனே! குந்தி மகனை முதலில் நான் பார்த்தேன். நீ முந்தி வந்தவனாக இருக்கிறாய். இவன் முந்திப் பார்த்தவனாக இருக்கிறான். இருவரும் இந்த விஷயத்திலும் சமானமாகவே இருக்கிறீர்கள். ஆகையால் நான் இருவருக்கும் சகாயம் செய்ய வேண்டியவன். பரிசுகள் கொடுப்பதில் சிறியவர்களுக்கு முதலில் கொடுக்க வேண்டும் என்பது பூர்விக வழக்கம். ஆதலால் பார்த்தனுக்கு முதலில் தருகிறேன். போர் செய்வதில் எனக்குச் சமானமானவர்களும் மகா வீரர்களுமான என் குலத்தவர்கள் நாராயணர்கள் இருக்கிறார்கள். அவர்கள் திரண்டால் பெரிய படையாகும். யுத்தத்தில் யாருமே அவர்களை நெருங்க முடியாது. அவர்கள் ஒரு புறமிருப்பார்கள். இன்னொரு பக்கம் ஆயுதம் எடுக்காதவனாகவும் யுத்தத்தில் போர் புரியாதவனாகவும் நான் ஒருவன் மட்டும் இருப்பேன். பார்த்தனே! நன்றாக அநேக தடவை ஆலோசித்து உனக்கு எது பிரியமோ அதை நீ வரிக்கலாம். தனி மனிதனாகவும் ஆயுதமற்றவனாகவும் இருக்கும் என்னுடைய சகாயம் வேண்டுமா? அல்லது வீரர்களான நாராயணர்களின் சேனாபலத்தை யுத்தத்தில் விரும்புகிறாயா? சொல். பழைய நெறியை அனுசரித்து இளையவனாகிய நீ முதலில் கோரலாம்" என்றான்.

கிருஷ்ணனால் இவ்வாறு சொல்லப்பட்ட தனஞ்சயன் தாமதமும் சந்தேகமுமின்றி உடனே "ஆயுதமெடுக்காமல் நீர் என் பக்ஷத்தில் இருந்தால் போதும்" என்று பதில் சொல்லி விட்டான்.

"இது என்ன அற்புதம்! க்ஷத்திரிய உலகத்துக்கும் தேவதானவர்களுக்கும் என்ன படிப்பினை!" என்கிறார் இவ்விடத்தில் பௌராணிகர்.

• • •

துரியோதனனுக்கு அடங்காத மகிழ்ச்சி. அருச்சுனன் ஏமாந்தான் என்றெண்ணினான். வாசுதேவனுடைய சேனை தன் பங்காக இருக்கட்டும் என்று அவன் கேட்டுப் பெற்றுக் கொண்டான். "லக்ஷக்கணக்கான பெருஞ்சேனையைப் பெற்று விட்டேன்" என்று அதிக சந்தோஷத்தை அடைந்தவனாக, பலதேவரிடம் போனான். பீமனுக்குச் சமானமான மகா பலசாலியான பலராமன் துரியோதனன் சொன்னதையெல்லாம் கேட்டு விட்டுக் கூறினான்:—

"துரியோதனா! விராடன் மகளுடைய விவாக காலத்தில் நான் சொன்னதையெல்லாம் உனக்குச் சொல்லியிருப்பார்கள். உனக்காக நான் வேண்டிய அளவு பேசியிருக்கிறேன். பல முறை கிருஷ்ணனிடம் நான் சொல்லி வந்திருக்கிறேன் — நாம் கௌரவ பாண்டவர்களுக்குச் சம சம்பந்தம் என்று. ஆனால் என் பேச்சைக் கிருஷ்ணன் ஏற்றுக் கொள்ள மாட்டேன் என்கிறான். நான் என்ன செய்ய முடியும்? கிருஷ்ணன் சேராத இடத்தில் நான் ஒரு கணங்கூட இருக்க முடியாது. நான் பார்த்தனுக்கு உதவி செய்ய மாட்டேன்; உனக்கும் உதவி செய்ய முடியாது. கிருஷ்ணனுக்காக இவ்வாறு நிர்மானித்து விட்டேன். துரியோதனா! நீ மேன்மை பெற்ற குலத்தில் பிறந்திருக்கிறாய். அரசர்களெல்லாம் உன் வைபவத்தைப் பூஜிக்கிறார்கள். க்ஷத்திரிய தருமத்திற்கு இசைந்த முறையால் யுத்தம் செய், போ!" என்றான்.



• • •

துரியோதனன் "பெருஞ் சேனையை அடைந்து விட்டேன். பலராமனுடைய பிரியமும் என்

பால் இருக்கிறது. அருச்சுனன் நன்றாக ஏமாற்றப் பட்டான். "வாசுதேவனும் சேனை யற்றவனாகச் செய்யப்பட்டான்" என்று எல்லா விதத்திலும் தான் வெற்றி யடைந்ததை எண்ணி அஸ்தினபுரம் திரும்பினான்.

• • •

"அப்பனே! தனஞ்சயா! சேனா பலத்தை விட்டு விட்டு ஏன் இவ்விதம் தீர்மானித்தாய்?" என்று கண்ணன் கேட்க, அருச்சுனன் சொன்னான்.

"நீர் தனியாகவே இருந்து எல்லா அரசக் கூட்டத்தையும் ஒடுக்கும் சக்தி படைத்திருக்கிறீர். நானும் ஒருவனாகவே நின்று இவர்கள் எல்லாரையும் வெல்லும் சாமர்த்தியம் படைத்திருக்கிறேன். நீர் உலகம் முழுதும் புகழ் பெற்று விட்டீர். அதைப் போன்ற புகழை அடைய நானும் விரும்புகிறேன். ஆகையால் நீர் ஆயுதம் எடுக்காமல் எனக்குத் தேர் மட்டும் ஓட்ட வேண்டும். இதை வெகு காலமாக நான் ஆசைப்பட்டு வருகிறேன். இந்த விருப்பத்தை நீர் இன்று பூர்த்தி செய்வீர்."

இவ்வாறு பார்த்தன் சொன்னதைக் கேட்ட வாசுதேவன் சிரித்துக்கொண்டு "என்னுடன் போட்டி போடுகிறாயா? இது உனக்குத் தகுந்ததே யாகும்" என்று ஆசீர்வதித்து, அவன் செய்த தீர்மானத்தைப் பாராட்டினான்.

கண்ணன் பார்த்தனுக்குச் சாரதியான கதை இதுவே. இதைப் படித்தவரும் கேட்டவரும் பார்த்தசாரதியின் அருளுக்குப் பாத்திரம் ஆவார்கள்.



"என்ன ஐயர்வாள்! ரேஷனில் பாதி கோதுமை கொடுக்கறேன். அது உங்களுக்குப் பிடிக்கிறதோ?"
"பிடிக்கிறது, பிடிக்கிறது! மென்னியை ரொம்ப நன்னாய்ப் பிடிக்கிறது!"

## கர்நாடக சங்கீத வித்வான்கள் :

# லக்ஷ்மணாசாரியார்

ஆலமங்கலம் வைத்தியநாத பாகவதர்

வேத சாஸ்திரங்களில் தேர்ச்சியான ஞானத்தை அடைந்து, அத்துடன் ஜனங்களுக்குப் பகவானுடைய குணத்தைப் போதிக்க வேணுமென்று ஹரிகதா காலக்ஷேபங்களும் செய்து வந்தார். காலக்ஷேபங்கள் செய்வதற்குத் தக்க சங்கீத ஞானமும் சாரீ(ர)மும் உடையவரென்று சொல்ல முடியாது. ஆனால் எவ்வளவு நேரம் காலக்ஷேபம் செய்தாலும் இவர் தம்முடைய பாண்டித்யத்தைக் கொண்டு யாரையும் பிரமிக்கும்படி செய்வார். இவருக்கு அநேக விஷயங்களில் பரிபூர்ண யோக்யதை இருந்து வந்தது.

முக்யமாக, வேதங்களுக்கு வர்ணக்ரமம் சொல்லக் கூடிய சக்தி இவருக்கு உண்டு.

அவைகளிலே சதாவதானம் செய்யும்படியான ஒரு யோக்யதையும் இருந்தது.

பகவான் ஸ்ரீ கிருஷ்ணன் சொல்லுகிறது போல் ஸ்ரீ கீதா சாஸ்திரத்தைச் சொல்லும்படியான பக்தி ஞானமும் பெற்றிருந்தார்.

தெலுங்கு, கன்னடம், மஹாராஷ்டிரம் முதலான பாஷைகளில் கவனம் செய்யக்கூடிய உயர்ந்த ஞானமும் இவருக்கு இருந்தது.

இத்யாதி யோக்யதைகளை வகித்து அநேக சாஸ்திர புராண இதிஹாஸ சாரத்தைக் கதைகளில் பிரயோகம் செய்து பண்டித பாமரர்களை ரொம்பவும் திருப்தி செய்து வைத்தவர்: உபன்யாஸ காலத்தில் ஒவ்வொரு வார்த்தையும் மிக ருசியுடன் விளங்கும். ஒரு சமயம் ஜகத்குரு சிருங்கேரி ஸ்வாமிகளிடத்தில் கீதை பதினெட்டு அத்தியாயத்தையும் பதினெட்டு நாள் சொல்லி, த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம், இம் மூன்றிலும் போற்றும்படி கீதைக்குப் பாஷ்யமும் சொல்லி, ஸ்வாமிகளால் மிகவும் கொண்டாடப்பட்டு விசேஷ சன்மானங்களைப் பெற்றார். சென்னையில், மாதக்கணக்காக வசித்து ஏராளமான கதைகளும் உபன்யாசங்களும் செய்து மிக்க புகழை அடைந்தவர்.

ஸ்ரீ தியாகப்ரும்ம உத்ஸவத்தில் தலைவர் (ஸ்தா)னத்தை வகித்துக் கைங்கர்யம் செய்து சிறப்பித்து வந்தார். பகவத்கீதையைப் பதினெட்டு நிமிஷத்திலும் சொல்லுவார்; பதினெட்டு நாளும் சொல்லுவார். பதினெட்டு மாதமும் சொல்லும் சக்தி வாய்ந்தவர். கீதைக்கு உயர்தரமான பாஷ்யமும் எழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறார். அநேகமாக இவர் வாழ் நாட்களைச் சென்னையிலேயே கழித்து ஒரே நாளில் இரண்டு மூன்று ஆவர்த்தி உபன்யாசங்களைச் செய்துகொண்டு ஆயிரக்கணக்கான சிஷ்யர்கள் இவரை வணங்கப் பெற்றுத் தக்க சன்மானங்களையும் அடைந்து புகழுடன் விளங்கினார். ஸ்ரீ பஞ்சநத க்ஷேத்திரத்தில் தர்மஸம்வர்த்தனியின் சந்நிதியில் விளங்குகிற ஆஞ்சநேய மூர்த்தியை உபாஸித்து, அந்த அனுக்ரஹ பலத்தால் லக்ஷ்மணாசாரியார் ஜகத் விக்யாதியை அடைந்தார்.

# அதுவும் இல்லையா?

— ஸோமாஸ் —

வியாக்ர பாத சர்மாவினிடம் யாரும் எந்தக் காரியத்தை உத்தேசித்தும் போனது கிடையாது; தப்பித் தவறிப் போனவர்களும் வெற்றியுடன் திரும்பினது கிடையாது. தோல்விகரமான வாபஸ்தான்! அன்று சர்மாவைப் பார்த்து "நமஸ்காரம்" என்று கூறிக்கொண்டே ஒருவர், கையில் ஒரு பெட்டியுடன் உள்ளே நுழைந்தார். வந்தவர் ஏதாவது தர்ம ஸ்தாபனங்களுக்கு நன்கொடை திரட்டும் உத்தேசத்துடன் வந்தவரோ என்று சர்மாவுக்குத் திகிலாய்ப் போய்விட்டது. இருந்தாலும் சர்மா தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "நீங்கள் யார்? எங்கே யிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டார்.

"தங்களைப் போன்ற பெரிய மனிதரைப் பார்க்க எங்கிருந்து வந்தால்தான் என்ன?"

"நான் பெரிய மனிதன் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? எதற்காக இப்படி இல்லாததையும் பொல்லாததையும் சொல்லி என்னைப் புகழ்கிறீர்கள்?"

"தாங்கள் பெரிய மனிதர் என்பது தங்கள் முகவிலாசத்திலிருந்தே தெரிகிறதே! யாராவது சொல்ல வேண்டுமா என்ன? உண்மையைச் சொன்னால் புகழ்வதாக அர்த்தமா?"

"சரி, நீங்கள் வந்த காரியம் என்ன?"

"அப்படி யொன்றும் பிரமாதமான காரியம் இல்லை. பேஷான கூந்தல் வளரும் தைலம் இருக்கிறது. அதைப் பற்றி நானே புகழ்வது சரியல்ல. இருந்தாலும் என்னைத் தவிர அந்தத் தைலத்தின் பெருமை வேறு யாருக்கும் தெரியாதாகையால் நானே அதைப் பற்றிச் சொல்லுகிறேன். இந்தத் தைலத்தை உபயோகித்தால் வாய்க்கால் கரையில் பசும்புல் வளருவதுபோல் தலையில் கூந்தல் வளரும். ஒரு புட்டி வாங்கி உபயோகித்துப் பார்த்தால்......"

"தாமிரச் செம்புபோல் இருக்கும் என் தலையைப் பார்த்த பின்பும் கூந்தல் வளரும் தைலம் வேண்டுமா என்கிறீர்களே!"

"மன்னிக்கணும்! உங்கள் தலை வழுக்கையைப் பார்த்த பின்புதான் கூந்தல் வளரும் தைலத்தின் ஞாபகம் வந்தது. வீட்டில் யாருக்காவது ......?"

"இந்த வீட்டில் நானும் என் தாயாரும் தான். என் தாயாருக்கு இனிமேல் கூந்தல் வளரும் தைலம் அவசியமே யில்லை."

"வழுக்கை நிவாரண தைலம் என்னிடம் இருக்கிறது. அதை உபயோகியுங்கள்."

"பேஷ், பெரிய மனிதன் என்பதற்கு வழுக்கைத் தலை ஒரு முக்கிய அடையாளமல்லவா? அதைப் போக்கிவிடுகிறேன் என்கிறீரே!"

"சரி, அது போகட்டும். உயர்ந்த பல்பொடி இருக்கிறது! அதை உபயோகித்தால் கல்பகோடி காலத்துக்கும் பல் அசையாது."

"அடடா, இதுவும் எனக்கு உபயோகமில்லை. நான் பொய்ப் பல் வைத்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு எதற்குப் பல்பொடி?" என்றார் சர்மா.

சட்டென்று புதிய ஆசாமியின் முகத்தில் ஒரு புதிய ஒளி வீசியது. "அப்படியா? இன்னொரு தைலம் இருக்கிறது. மூளை வேலை உடையவர்களுக்குச் சஞ்சீவி போன்றது. மூளை உள்ளவர்கள் ஒவ்வொருவரும் இந்தத் தைலத்தை அவசியம் உபயோகிக்கலாம். அதுவும் தங்களுக்கு உபயோகமில்லையோ?" என்று கேட்டார் அந்த எமகாதகப் பேர்வழி.

சர்மா தம் தோல்வியை ஒப்புக்கொண்டு பணத்தை எடுத்தார். அவர் தலையில் தைலத்தைக் கட்டி விட்டு, வந்தவர் நடையைக் கட்டினார்.

---



"இன்று என்ன ஸார் தேதி?"
"தெரியவில்லையே! அதோ, உங்கள் மேஜைமேல் கிடக்கும் தினசரியைப் பாருங்களேன்!"
"அது நேற்றையப் பத்திரிகையாச்சே!"




# அவன் திருட்டு விற்பனையை ஒழிக்க உதவுகிறன்

தேசிய போர்முனையின் பிரசாரம்

AAA 1384—C. TM

KALKI—11-2-1945

# தேவியின் சிலை





தி. நா. கிருஷ்ணமூர்த்தி

சிலம்புச் செல்வம் அரங்கேற்றப்பட்ட சமயம் தென்னாடெங்கணும் கற்புத் தெய்வம் கண்ணகிதேவியின் சிலா ரூபங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டு ஆங்காங்கு வழிபாடு நடந்து கொண்டிருந்தது. சேரன் தம்பி ஒலித்த சிலம்பின் சத்தம் இலங்கைத் தீவு முதலான தென் தீவுகளில் எல்லாம் எதிரொலித்துக் கொண்டிருந்தது. மேலைக் கடல் துறைமுகங்களில் கடல் கொண்ட முசிரி அப்பொழுது தலை சிறந்து விளங்கியது.

சேரநாட்டின் தலைநகரான வஞ்சியில் கண்ணகி தேவிக்கெனக் கோவில் எடுப்பித்து வழிபாடு நடத்தி வந்த செங்குட்டுவன் முசிரியிலும் பிரமாண்டமான கோவில் ஒன்று கட்ட வேண்டும் என்று விரும்பினான். மன்னனின் விருப்பம் மக்களுக்குப் பிரகடனம் செய்யப்பட்டது. குறுநில பெருநில மன்னர் ஒவ்வொருவருக்கும் செய்தித் தாள் விடுக்கப்பட்டது. அதனை ஏற்றுக்கொண்ட முகமாக சோழவேந்தன், பாண்டி நாட்டரசன், இலங்கை மன்னன் முதலான பெருநில மன்னர் ஒவ்வொருவரும் தத்தம் நாட்டிலிருந்து கைதேர்ந்த சிற்பிகளைச் சேர நாட்டுக்கு அனுப்பி வைத்தனர்.

சேரன் அவர்கள் அனைவர்களுக்கும் தக்க வசதிகள் தந்து கோவில் எழுப்புவதற்கான ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்யுமாறு கட்டளை யிட்டான். கடலை அடுத்து நின்ற குமரிக் குன்றின் உச்சியில் கோவில் எடுப்பது என முடிவு செய்யப்பட்டது. சேர நாட்டின் அரண்மனைச் சிற்பி சொக்கநாதரின் மேற்பார்வையில் தேவியின் கோவில் அழகுற மலையுச்சியில் எழும்பி வந்தது. கோவில் பூர்த்தியாகும் சமயம், மன்னன் ஒரு



பிரகடனம் செய்தான். "கண்ணகி தேவியின் சிலையை அழகுறச் செதுக்கித் தரும் சிற்பி யாராயிருந்தாலும் அவனுக்கு இளங்கோவடிகள் இயற்றிய 'சிலப்பதிகாரம்' என்னும் பெருங் காப்பியத்தின் மூலப் பிரதி பரிசளிக்கப் படுவதுடன் அவன் அந் நாட்டின் அரசாங்க சிற்பியாக்கப் படுவான்" என்பதே அந்தப் பிரகடனம்.

வாணியின் அருள் பெற்ற சிற்பி ஒவ்வொருவனும் இப்போட்டியில் கலந்து கொள்ள விரும்பினான். தென்னாடெங்கும் சிற்பக் கலையில் ஒரு மறு மலர்ச்சி உண்டாகியது.

மன்னன் இப் பிரகடனத்தைச் செய்யு முன் சொக்கநாதரின் சம்மதத்தையும் பெற்றுக் கொண்டான். அரசனின் மதிப்புக்கும் அடிகளின் அன்புக்கும் பாத்திரமாகியிருந்த அவரைத் தவிர யாரால் அந்தப் பரிசை அடைய முடியும்? இப் பிரகடனம் மன்னனால் வெளியிடப் பட்டதாயினும் மூல காரணமா யிருந்தது இளங்கோவடிகளின் கவி யுள்ளம்தான். சிற்பக் கலையில் ஒரு மலர்ச்சி உண்டாக்க வேண்டும் என்பதே அவரது விருப்பம். ஆனால் மக்கள் நினைத்தது வேறு. இப் பிரகடனம் சொக்கநாதர் மற்ற சிற்பிகளுக்கு விடுத்திருக்கும் சவால் என்று நினைத்தனர்.

2

நகரப் புறத்தே இருந்த சிறிய தொரு குடிசை; அதனைச் சார்ந்த தென்னந் தோப்பு; தோப்பின் நடுவே தெள்ளிய நீர் நிறைந்த கிணறு. இயற்கை தந்த சாதாரணப் பொருள்களைக் கொண்டு அமைத்த தொரு சாந்தி நிலவிய தனி இடம். கிணற்றருகே மேடை ஒன்றின் மேல் அமர்ந்து இளைஞன் ஒருவன் தன் முன்னே நின்ற சிலையினைச் செதுக்கிக் கொண்டிருக்கிறான். அவனது மனம், கண், கை மூன்றும் ஒன்றுபட்ட நிலையில் அச் சிலைக்கு உயிர் கொடுப்பதில் ஈடு பட்டிருந்தன. அவன் செதுக்கும் வகையிலிருந்தே அவன் ஒரு மேதை என்பது நன்கு விளங்கியது.

"சங்கமா!" என்ற சத்தத்தைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். அரசனும், இளங்கோவடிகளும், சொக்கநாதரும் தனக்குப் பின்னே நின்று கொண்டிருப்பதை அறிந்து எழுந்து நின்று, "அரசே! வணக்கம். அடிகளே, வணக்கம். சிற்பியாரே, வணக்கம். தேவியின் அருளால் இன்று மும்மணிகளையும் ஒரு சேரக் காணும் பாக்கியம் பெற்றேன். அரசர் கட்டளை எதுவாயினும் செய்து முடிக்கக் காத்திருக்கிறேன்" என்று பணிவாகக் கூறி நின்றான் சங்கமன்.

"சங்கமா! இங்கு உனக்குச் சகல நலன்களும் சரிவரக் கிடைக்கின்றனவா? உனது அரசர் கயவாகு மன்னர் உன்னைப் பற்றி விசாரித்து எழுதி யிருக்கிறார். உன்னைச் சந்தித்து உன் நலனை விசாரித்துப் போகவே வந்தோம். கயவாகு மன்னருக்கு ஏதேனும் செய்தி இருந்தால் தெரிவி. இன்று தூதுவர் இலங்கைத் திரும்பிச் செல்லக் காத்திருக்கின்றனர். அவர்களிடம் கூறி அனுப்புவோம்" என்று ஆதரவுடன் சேரன் கூறினான்.

"அரசே, தங்களை நாடி வந்த எந்த ஏழையும் இந்நாட்டில் மனம் கசந்து வாழ்ந்ததில்லை. குறைவற்ற சகல நலன்களும் கிடைக்கின்றன.' எனது மன்னர் கயவாகு வேந்தருக்கு எனது வணக்கம் உரித்தாக வேண்டுகிறேன். எனது பிரிவாற்றாமைக்காக வருந்திக் கொண்டிருக்கும் வயது முதிர்ந்த என் தாய்க்கு என் நலனைத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொண்டதாகவும் சொல்லி அனுப்ப வேண்டுகிறேன்" என்றான்.

"அப்படியே செய்வோம்" என்று கூறி விடை பெற்றுக் கொண்டு மூவரும் புறப்பட்டனர். மன்னனும் இளைஞனும் பேச்சில் ஈடுபட்டிருந்தனர். ஆனால் அடிகளும் சிற்பியாரும் தங்கள் முன்னே நின்ற சிலையின் அழகில் ஈடுபட்டுத் தங்களை மறந்து நின்றனர். பூரணமாகாத அந்தச் சிலையிலிருந்தே மறுக்க முடியாத ஒரு உண்மை அவர்களுக்குப் புலப்பட்டது. பரிசிற்குரிய சிற்பி இந்த இளைஞனைத் தவிர வேறு ஒருவனாகவும்

இருக்க முடியாது என்பதே அந்த உண்மை. அடிகளின் முகத்தில் சாந்தி நிலவியது. சிற்பியின் முகம் அவர் உள்ளத்தில் நடந்த போராட்டத்தை எடுத்துக் காட்டியது. தான் கொடுக்கப் போகும் பரிசிற்கு ஏற்ற ஒரு கலைஞனைக் கண்டதில் அடிகளுக்கு எல்லையற்ற ஆனந்தம். தனக்குக் கிடைக்க இருக்கும் பரிசிற்குப் போட்டியிடும் ஒரு சிற்பியைக் கண்டதில் சொக்கநாதருக்கு மனக் கலக்கம்.

## 3

அன்றைய இரவு நிலவு பால்போல் வீசிக் கொண்டிருக்கிறது. சிற்பக் கூடத்தினை ஒட்டி அமைந்ததொரு ஆசிரமம். முதியவர் ஒருவர் திறந்த வெளியில் அமர்ந்து தன் முன்னே நிற்கும் பாறை ஒன்றைச் செதுக்கிக் கொண்டிருக்கிறார். அவர் அருகே இள நங்கை ஒருத்தி அமர்ந்திருக்கின்றாள். மௌனமாக அவர்கள் இருவரும் இருந்தது அசாதாரணமான எதையோ சுட்டிக் காட்டியது. அவள்தான் முதலில் பேசினாள்.

"அப்பா, இப்படி நீங்கள் எத்தனை நாள் கஷ்டப் படுவதாக முடிவு செய்திருக்கிறீர்கள்? இராப்பொழுதில் தேவியின் சிலையைச் செதுக்குவதில் செலவிடுகிறீர்கள். பகல் எல்லாம் கோவில் கட்டுவதில் ஈடுபடுகிறீர்கள். நானே அடிகளிடம் இதைப்பற்றிக் கூறப்போகிறேன்" என்று கோபம் தோன்ற ஆதரவாகக் கூறினாள்.

"வள்ளி, என் தாயல்லவா நீ? போய்ப் படுத்துக்கொள். இன்னும் சிறிது நேரத்தில் நானும் எனது வேலையை முடித்துக் கொண்டு வந்து விடுகிறேன்" என்று சொல்லிப் பார்த்தார். ஆனால் அவள் விடுவதாயில்லை.

"அப்பா! மன்னரின் ஆதரவும் அடிகளின் அன்பும் தங்களைத் தவிர வேறு யாருக்குக் கிடைக்கப் போகிறது? தேவியின் அருள் உங்களிடம் பரிபூரணமாக இருப்பதால் யாரால் உங்களுடன் போட்டியிட முடியும்? எளிதில் கிடைக்கக் கூடிய அப் பரிசிற்காக ஏன் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டும்?" என விவாதம் செய்ய ஆரம்பித்து விட்டாள்.



முதியவர் தனது வேலையைச் சிறிது நிறுத்தித் தன் மகளை அன்புடன் பார்த்துக் கொண்டே, "வள்ளி, நானும் அப்படித்தான் நினைத்திருந்தேன். ஆனால் இலங்கை நாட்டிலிருந்து வேறொரு மன்னரால் அனுப்பப்பட்டு, இன்று நமது பழைய ஆசிரமத்தில் தங்கியிருக்கும் இளஞ் சிற்பியினால் அந்த நினைவு கருகிச் சாம்பராகிவிட்டது. நான் இவ்விதம் சிரமப்பட்டால்தான் எனது பதவியும் இந்நாட்டின் பெருமையும் காப்பாற்றப்படும். இல்லையேல் அவன் இந்நாட்டின் தலைசிறந்த சிற்பியாக்கப் படுவதுடன், இந்நாட்டின் பெருமையும் அழிந்து போகும்" என்று உணர்ச்சி மேலிட்டுக் கூறினார்.

இவ்விருவரும், சொக்கநாதரும் அவருடைய ஒரே புதல்வியான வள்ளியுந்தான். சொக்கநாதரைப்போல் வள்ளியும் சிற்பக் கலையில் அதி மேதைதான். தகப்பனுடன் போட்டியிட அவள் விரும்பவில்லை. தகப்பனும் மகளுமாகச் சேர்ந்து சமைத்ததுதான் அவர்கள் முன் நின்ற சிலை. வள்ளியே அதனைச் செய்து முடித்திருப்பாள். ஆனால் சொக்கநாதர், சங்கமனின் திறமையை உணர்ந்ததும், தானே தேவியின் சிலைக்கு உயிர் கொடுப்பதில் ஈடுபட்டார். அவருக்குக் கிடைத்த நேரம் இரவுதான். தனது பெருமையையும் நாட்டின் பெருமையையும் காப்பாற்றுவது தனது கடமை என நினைத்தார். அக் கடமையை நிறைவேற்ற எப்படிப்பட்ட தியாகமும் செய்வதென முடிவு செய்து விட்டார்.

தனது தந்தை இவ்விதம் சிரமப்படுவது வள்ளிக்கு வருத்தத்தைத் தந்தது. தந்தை இவ்விதம் அவருடைய முதிய காலத்தில் வருந்துவதைப் பார்க்கப் பார்க்க அவளுக்கு இலங்கையிலிருந்து வந்திருக்கும் சங்கமன் மேல் தீராத கோபம் உண்டாயது. முன்பின் பார்த்திராத அந்தச் சிற்பியை மனதார வெறுக்கவும் ஆரம்பித்தாள்.

## 4

தேவியைப் பிரதிஷ்டை செய்யக் குறித்

திருந்த நாளும் நெருங்கிக் கொண்டிருந்தது. இரவு பகல் உழைத்து வந்ததால் சொக்க நாதரின் உடல் நலம் குன்ற ஆரம்பித்தது. இரவு நில வொளியிலும் விளக்கு வெளிச்சத் திலும் நெடு நேரம் உட்கார்ந்து சிலையினைச் செதுக்கியதால் கண்களில் நோவு கண்டது. அவர் அதைப் பொருட்படுத்தாமல் தமது வேலையில் ஈடுபட்டிருந்தார். வள்ளி எவ் வளவு கூறியும் கேட்பதாக இல்லை. கடைசியாக ஒரு முடிவுக்குத்தான் அவளால் வர முடிந்தது.

அன்று பூர்ணிமை இரண்டொரு தினங் களுக்கு முன் தன் தந்தையுடன் பேசிக் கொண்டிருந்தது போல் அன்றும் அருகில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள். சொக்கநாதர் தன்னை மறந்து வேலையில் ஈடுபட்டிருந்தார். அவள் கூறியது ஒன்றை யும் செவியில் போட்டுக் கொள்ளாமலே தேவியின் சிலையைச் செதுக்கிக் கொண் டிருந்தார். அவரை அப்படியே விட்டுவிட்டு அவள் எழுந்து நடந்தாள். மனதில் குமுறிக் கொண்டிருந்த கோபம் அவளை உந்தி மேலே செல்லத் தூண்டியது. தனது பெண்மை, இரவு, அச்சம் அனைத்தையும் மறந்து நடந்து கொண்டிருந்தாள் வள்ளி.



“நான் அப்பொழுதே சொன்னேனே கேட்டீர்களா. இந்த டாக்டர் வீட்டிலே சம்பந்தம் வேண்டாமென்று ?”

“ஏன்! இப்ப என்ன வந்துட்டது ?”

“அன்னைக்கு அவர் நம்ம பெண் ஜாதகத்தை வாங்கிக் கொண்டு போவதற்கு வந்தாரே. அதற்கு விசிட்டிங் பீஸ்-க்கு பில் போட்டு அனுப்பியிருக்கிறார்!”

அவளுடைய கால்கள் நகர்ப் புறத்தே இருந்த சங்கமனின் குடிசையை நாடிச் சென் றன. தனது குழந்தைப் பருவத்தில் தாயுடன் விளையாடிய அத் தோட்டத்தையும் குடிசை யையும் அவள் இன்னும் மறந்து விடவில்லை. நேரே சென்று ஆசிரமத்தை அடைந்தாள்.

சங்கமன் எப்பொழுதும்போல் நிம்மதி யாக உட்கார்ந்து சிலையைச் செதுக்கிக் கொண்டிருந்தான். அவனுடைய கைகள் தேவியின் சிலைக்குப் பூர்ணத்துவம் கொடுத் துக் கொண்டிருந்தன. சிறிது செதுக்குவ தும் சிறிது நேரம் தன் முன் நின்ற ஜீவன் நிறைந்த அச்சிலையைப் பார்த்துக் கொண்டே தன்னை மறந்து உட்கார்ந்திருப்பதுமாக இருந்தான். அவ்விதம் தன்னை மறந்த நிலையில் அவன் இருக்கும் பொழுதுதான் வள்ளி திடும் பிரவேசமாகத் தோட்டத்தி னுள் நுழைந்தாள். குடிசையை நோக்கி விரைந்து வந்த அவள் கிணற்றருகே வந்த தும் அப்படியே நின்றுவிட்டாள். அவளால் ஒரு அடிகூட முன்னே எடுத்து வைக்க இயலவில்லை. அவளுக்கு இருந்த கோபம் எல்லாம் எங்கோ சென்று மறைந்தது. எஞ்சியது நாணம்தான். திரும்பி விடலாம் என்று நினைத்தாள். ஆனல் மோன நிலையில் அமர்ந்திருந்த அந்த இளைஞனின் முகத்தில் வீசிய ஞான ஒளியும் சௌந்தர்ய தேவியாய்த் திகழ்ந்த அந்தச் சிற்பமும் அவளை ஆகர் ஷித்தன. இளைஞனையும் சிலையினையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே நின்று விட் டாள். அவளை அறியாமலே அவளது சிரம் கவிழ்ந்தது. கைகள் குவிந்தன. அந்நிலை யில் அவள் அப்படி எவ்வளவு நேரம் நின் றிருந்தாளோ? மறுபடியும் தலை நிமிர்ந்து பார்க்கும்பொழுது சிற்பி தனது வேலையில் ஈடுபட்டிருப்பதைப் பார்த்தாள். தான் நினைத்து வந்த அனைத்தையும் ஒரு நீண்ட பெரு மூச்சில் ஐக்கியப் படுத்திவிட்டுத் திரும்பினாள். திரும்புமுன் அவளது மனம், “தேவி! நின்னை ஆக்கிய இப்பேதைக்கு நீண்ட ஆயுளைத் தா” என்று வணங்கியது.

எங்கிருந்தோ ஒரு ஆந்தை வீறிட்டுக் கத்தியது. ஆந்தையின் சத்தம் வள்ளியை ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது “தேவி!” என்று தன்னை மறந்து கூவிவிட்டாள். சங்கமன் இவ்விரு சத்தங்களையும் கேட்டுத் திரும்பினான். செதுக்க ஓங்கிய கத்தில் அதனுடைய வேலையைச் செய்தது. சதக் கென்ற சத்தத்துடன் இடது கைக் கட்டை விரலிலிருந்து இரத்தம் பீறிட்டுச் சிலையின் முகத்தை நனைத்தது.

தன்னைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கும் சங்கமனை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தாள் வள்ளி. அவனது முகத்தில் சாந்தி நிலவியது. ஆனால் அவளுடைய கண்களில் அப்பொழுது உண்டாகிய பலத்த அடியின் வேகத்தின் சாயல் படர்ந்திருந்தது. பிரகாசம் குன்றாது தன்னையே அவைகள் கூர்ந்து நோக்கிக் கொண்டிருப்பதை உணர்ந்த அவளுடைய ஒவ்வொரு அங்கங்களும் நாணத்தாலும் அச்சத்தாலும் நடுங்க ஆரம்பித்தன. கன்னங்களில் செக்கர் படர்ந்திருந்தது. அந்நிலையைச் சமாளிக்க அவளுக்கு ஒரே ஒரு வழிதான் தோன்றியது. அவனது சாந்தி நிலவிய முகம் அவளுக்கு ஊக்கமளித்தது. தனது சேலைத் தலைப்பின் ஒரு பகுதியைக் கிழித்தெடுத்து அவனுடைய விரலிலிருந்து வழிந்தோடிக் கொண்டிருக்கும் இரத்தத்தை நிறுத்தலாம் என்று அவனை அணுகினாள். அவனும் ஒன்றும் பேசாது கையை அவள் முன் நீட்டினான். துடித்துக் கொண்டிருந்த கரம் அவளுடைய செந்தாமரை போன்ற கைகளில் அடைக்கலம் பெற்றது. நடுங்கும் கைகளுடன் இரத்தம் கசியாது விரலைச் சுற்றி அவள் கட்டும் வகையைப் பார்த்துக் கொண்டே இருப்பதில் தன்னை மறந்தான்.

“நீ யார்?” என்று கேட்கத் தோன்றியது அவனுக்கு. ஆனால் அவளை அவ்வளவு அலட்சியமாகக் கேட்டுவிட அவன் மனம் விரும்பவில்லை. அவளுடைய மனத்திலும் ஒரு பெரும் போராட்டம் நடந்தது. ஒரு திருடியைப்போல் வந்து அவன் முன்னே நிற்கும் தனது நிலையை எவ்வாறு அவனுக்கு உணர்த்துவது என்று அவளுக்குத் தெரியவில்லை. அவன்தான் முதலில் பேசினான். “எதற்காக இந்த நேரத்தில் இங்கு வந்தாய்?” என்று கேட்க நினைத்தவன், முன்பின் பழகிய மனிதனைப்போல், “தனியே இந்நேரத்தில் வரலாமா?” என்று கேட்டான்.

அவனுடைய அந்த ஆதரவான கேள்வி அவளது கன்னங்களை இன்னும் அதிகமாகச் சிவக்கச் செய்தன. பதில் ஒன்றும் கூறத் தோன்றாதவளாய், “நான் வருகிறேன்” என்று கூறிவிட்டுப் போக ஆரம்பித்தாள். “எப்பொழுது?” என்ற அவனது கேள்விக்கு அவளால் பதில் கூற முடியவில்லை. அவனை ஏறிட்டு ஒருமுறை பார்த்து விட்டுப் பொங்கி எழுந்த உணர்ச்சிகளுடன் வேகமாக நடந்து சென்றாள் வள்ளி.

அவளது கால்கள் அவளைச் சுமந்து சென்றன. உணர்ச்சி வேகம் அவளது கால்களுக்கும் வேகத்தைத் தந்தது. மனம் துள்ளிக் குதித்து விளையாடியது. அவளால் அதைக் கட்டுப்படுத்த முடியவில்லை. குடிசையை நெருங்க நெருங்க அவளால் தனது இன்ப உணர்ச்சிகளை அடக்க முடியவில்லை. ஆனந்த வெறி கொண்ட இதயத்தில் இன்ப வெள்ளம் பாய்ந்தோடியது. ஓடிச் சென்று தேவியின் சிலையின் பாதங்களில் விழுந்து அன்று தனக்குக் கிட்டிய இன்பம் வெறும் கனவாகாது, நனவாக முடிய வேண்டும் என்று வேண்டிக்கொள்ள விரும்பினாள் வள்ளி. சொக்கநாதர் அவள் விட்டுச் சென்ற அந்நிலையிலிருந்து இன்னும் எழுந்திருக்கவில்லை. இன்னும் அவர் சிலையைச் செதுக்கிச் சீர்படுத்துவதில் ஈடுபட்டிருந்தார். அந்தச் சோக உருவத்தைக் கண்டவுடன் அவளுடைய இன்ப உணர்ச்சிகள் எல்லாம் சிதறுண்டன. அவள் அதுவரையிலும் சஞ்சரித்த கனவு உலகம் இருண்டு மறைந்தது.

“அப்பா!” என்று பரிவுடன் கூப்பிட்டாள். திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார் சொக்கநாதர். “வள்ளி! நீ இன்னும் தூங்கவில்லையா? நெடுநேரமாகி விட்டதா? இதோ வந்துவிட்டேன்” என்று எழுந்தார். தன்முன் நின்ற சிலையை வணங்கி விட்டுச் சொக்கநாதரும் வள்ளியுமாகக் குடிசையை நாடிச் சென்றனர். சொக்கநாதர் தனது மகளின் கைகளைப் பற்றி நடந்து வந்தார். அவருடைய கைகள் வெப்பமாக இருப்பதை உணர்ந்த வள்ளி அவருடைய நெற்றியில் கைவைத்துப் பார்த்தாள். அவருடைய உடல் முழுதும் அக்கினிபோல் வெப்பமாக இருந்தது. கண்களில் நீர் கசிந்து கொண்டிருந்தது. உலர்ந்து வரண்டு போன அவருடைய முகத்தில் சுரத்தின் வேகம் பரவியிருந்தது. வள்ளி பயந்து நடுங்கிவிட்டாள். “அப்பா, ஏன் இப்படி சுரத்துடன் வேலை செய்து கொண்டிருக்கிறீர்கள்? உடம்பெல்லாம் கொதிக்கிறது. உள்ளே வாருங்கள்” என விரைவாக அழைத்துச் சென்று அவரைப் படுக்கையில் படுக்க வைத்துச் சிசுருஷை செய்தாள்.

## 5

ஆதவன் உதிக்கும் சமயம். சொக்கநாதர் விழித்துக் கொண்டார். படுக்கையிலிருந்து எழுந்திருக்க முயன்றார். ஆனால் அவரால் கூடவில்லை. சுரம் இன்னும் குறையவில்லை. கண்களிலும் சோர்வு அதிக

மாகி இருந்தது. திறந்தால் கூச ஆரம்பித்தது. அவரருகே சோர்ந்து உறங்கிவிட்ட வள்ளி திடுக்கிட்டு எழுந்தாள். தனது தந்தை எழுந்திருக்க முயல்வதைப் பார்த்து "அப்பா, எப்படி இருக்கிறது? என்ன செய்கிறது? ஒன்றும் சொல்ல மாட்டேன் என்கிறீர்களே; வைத்தியரை அழைத்து வரட்டுமா?" என்று அன்புடன் கேட்டாள்.

"வள்ளி, ஒன்றுமில்லை. இன்று கோவிலுக்குச் செல்ல முடியாதுபோல் இருக்கிறது. நீ அடிகளிடம் இதைச் சொல்லிவர யாரையாவது அனுப்பு" என்று கூறிவிட்டு, வள்ளியின் கைகளைப் பற்றித் தன் கைகளில் வைத்துக் கொண்டார். "எனக்கு நீ ஒரு உறுதிமொழி தரவேண்டும். தேவியின் கண்கள் இன்னும் திறந்து விடப்படவில்லை. அதை நீதான் பூர்த்தி செய்யவேண்டும். என் கண்களில் சோர்வு கண்டுளது. தேவியைப் பிரதிஷ்டை செய்ய இன்னும் இரண்டு தினங்களே இருக்கின்றன. நீ அதற்குள் அதை முடித்து விடவேண்டும். சேர நாட்டின் பெருமையைக் காப்பாற்ற வேண்டும்" என்றார் கண்களில் நீர் பொங்க.

"அப்பா, தேவியின்மேல் ஆணை வைத்துக் கூறுகிறேன். எப்பாடு பட்டாயினும் உங்களது விருப்பத்தைப் பூர்த்தி செய்வேன். தேவியின் அருளால் வெற்றி யடைவேன்" என்று உறுதி மொழிந்தாள் வள்ளி.

அடிகளிடமிருந்து சொக்கநாதர் உடல் நலமின்றி வருந்துவதை யறிந்த சங்கமன், கோவிலில் அவனது வேலையை முடித்துக் கொண்டு நேரே சொக்கநாதரைப் பார்த்து வர எண்ணி அவரது ஆசிரமத்துக்குச் சென்றான். சாயங்கால வேளை. எங்கும் பொன்மயமான தூய ஒளி படர்ந்திருந்தது. ஆசிரமத்தில் நுழைந்து நேரே குடிசையை நோக்கி நடந்தான். குடிசையின் வாசலில் வள்ளி உட்கார்ந்து தேவியின் சிலைக்கு இறுதியாக ஜீவன் அளித்துக் கொண்டிருந்தாள். சங்கமன் இதை எதிர்பார்க்கவில்லை. தந்தையைப் போல் மகளும் சிற்பக் கலையில் மேதையாக இருப்பாள் என்று அவன் நினைக்கவே இல்லை. அதுவும் முதல் நாள் எங்கிருந்தோ வந்து அவனது வாழ்க்கையை ஒரு சிறிது நேரம் மலரச் செய்து பின் மங்கவைத்து விட்டு ஓடிவிட்ட அவளே இவளாக இருப்பதை அறிந்ததும் அவனது மனம் எல்லையற்ற ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் அடைந்தது.

தேவியின் கண்கள் திறந்து விடப்பட்டிருந்தன. அக் கண்களிலிருந்து வீசிய ஒளியில் கோபாவேசமும், அன்பும், வீரமும், ஆதரவும் கலந்து வெளிப்பட்டன. சௌந்தர்யமும் அருளும் நிறைந்த தேவியின் முகத்தில் ஒருவித சாந்தமும் நிலவியது. சங்கமன் அதுவரையிலும் தன்னுடைய கலைச் செல்வத்தைப் பற்றி அதிகமாக நினைத்திருந்தான். ஆனால் அந்த நினைவு தன் முன்னே உயிரற்ற பாறை ஒன்றினைச் செதுக்கி அதற்கு ஜீவன் தந்து கொண்டிருக்கும் பெண் ஒருத்தியினால் சிதறுண்டதை நினைக்க நினைக்க அவனுக்குத் தனது கலைச் செல்வத்தின்மேல் வெறுப்புத்தான் உண்டாயது. அவளுடன் தான் போட்டி யிடுவதை நினைக்க அவனுக்கே வெட்கமாக இருந்தது. அப்படிப்பட்ட கலைச் செல்வியை உலகம் போற்ற வேண்டும். அவளுக்குப் போட்டி இருக்கக் கூடாது. இருக்கவும் முடியாது என்று நினைத்தான். தன் முன் நின்ற சௌந்தர்ய தேவியின் முன்னே விழுந்து வணங்கி எழுந்து "தேவி! நீ வாழ்க! உனதருள் ஓங்குக! உன்னைச் செதுக்கிய இவள் பெருமை என்றென்றும் வாழ்க!" என்று வணங்கினான். வள்ளி, சப்தத்தைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

(அடுத்த இதழில் முடியும்)



# யாருக்குப் பரிசு

ராஜ்

வாமினி — வாசுதேவன் கல்யாணம், 'கண்டதும் காதல்' என்னும் நோயின் விளைவு அல்ல; பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு நடந்த கலியாணம்தான். ஆனால், கலியாணம் ஆன தினத்திலிருந்தே தம்பதிகள் ஒருவர்மேல் ஒருவர் அளவிலாத காதல் கொண்டு விட்டார்கள்.

ஒரு நாள், "வாமினி! உன் கூந்தலின் அழகுக்கு இணை எதுவுமில்லையடி!" என்று சொல்லிக் கொண்டே, அவள் அழகாக வாரி விட்டிருந்த ஜடையை அவசர அவசரமாக அவிழ்த்து விட்டுவிட்டான் வாசு. உங்களுக்கும் எனக்கும் இதைப் பார்த்தால் "இது என்ன காளியாத்தாள் போல் தலை விரி கோலம்!" என்றுதான் சொல்லத் தோன்றும். ஆனால் அவனோ அந்தக் கூந்தலைப் பார்த்துப் பூரித்துப் போனான்.

"ஆமாம்; எனக்கு ரொம்ப நாளாகப் பரிசு கொடுப்பதாகச் சொன்னீர்களே? என்ன கொடுக்கப் போகிறீர்கள்?" என்றாள் வாமினி.

வாமினி என்ன உத்தேசிக்கிறாள் என்பதை வாசுதேவன் உடனே தெரிந்து கொண்டு விட்டான். "என்ன வாமினி, உன் கரிய கூந்தலான வானத் திரையில் ஜொலிக்கும் நக்ஷத்திரங்கள் பதித்த வைரத் திருகு வில்லை வைத்துப் பொருத்தும்படி சொல்கிறாய்! அவ்வளவுதானே, அப்படியே செய்துவிட்டால் போச்சு!" என்றான் வாசு.

ரொம்ப சுலபமாகச் சொல்லி விட்டானே தவிர, அதைக் காரியத்தில் கொண்டு வருவது எளிதான காரியமா என்று ஆலோசித்தவுடன், வாசுதேவனால் ஒரு நீண்ட பெருமூச்சு விடாமல் இருக்க முடியவில்லை. ஏனென்றால் அவன் அறுபது ரூபாய் சம்பாதிக்கும் ஓர் ஏழைக் குமாஸ்தா!

ஆனாலும் மனிதன் தன் மனதில் ஒன்றைச் செய்ய வேண்டும் என்று நினைத்து விட்டால், அதைச் செய்தேவிடுவான். 'டிபன்' சாப்பிடுவதை நிறுத்தி, ரிக்ஷாக்காரனுக்குக் கொடுக்கும் காசை மிச்சப்படுத்தி, சினிமாவைப் பகிஷ்காரம் செய்து, க்ஷவரம் செய்து கொள்வதை வாரத்திற்கு ஒருமுறை ஆக்கி, தன் அருமை மனைவிக்கு வைரப் பரிசு அளிப்பதற்கு வேண்டிய வெள்ளையப்பனைக் குருவி மூக்கால் சேர்ப்பதுபோல் சேர்த்துக் கொண்டே வந்தான். பிரசவத்திற்காக வாமினி தாய் வீடு சென்றாள்.

வாசுதேவன் ஆனந்தத்திற்கு எல்லையே இல்லை. கையிலிருந்த தந்தியை திரும்பத் திரும்பப் படித்தான். வாமினிக்குப் பெண் குழந்தை பிறந்திருப்பதாகத் தந்தி வந்திருந்தது. அவளுக்கு என்று சேர்த்து தான் வாங்கி வந்த வைரத் திருகு வில்லையை ஒரு தடவை எடுத்துப் பார்த்துக் கொண்டான். அவன் மனக்கண் முன் வாமினியின் சுந்தரவதனத்தில் மலரப் போகும் முல்லைச் சிரிப்பு தோன்றியது.

ஊர் போய்ச் சேர்ந்ததும் அடக்க முடியாத ஆவலுடன் வாசுதேவன் வாமினி இருக்கும் அறை வாசற்படியில் போய் நின்றான். அவசரமாகப் பெட்டியைத் திறந்து "வாமினி, இதோ பார்!" என்று தன் வைரத் திருகு வில்லையை அவளுக்குக் காண்பித்தான். வாமினிக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

"வாங்கி விட்டீர்களா?" என்று சொல்லிக் கொண்டே அவள் விரைந்து வந்தாள். வைரத் திருகு வில்லையை எடுத்துக் கொண்டு போய், தன் சின்னஞ் சிறு குழந்தையின் சுருண்ட கேசத்தின் நடுவே வைத்துவிட்டு, அப்படியும் இப்படியுமாகச் சாய்ந்து சாய்ந்து அழகு பார்த்தாள்.

"உனக்கென்று தானே வாங்கி வந்தேன்!" என்றான் வாசு.

"எனக்கா? இனிமேல் குழந்தையின் அழகுக்கு அழகு செய்து பார்க்க வேண்டுமே தவிர எனக்கு எதற்கு?" என்று குழந்தையை வாரி எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டாள் வாமினி.

அப்பொழுது உள்ளத்தில் பொங்கித் ததும்பிய தாயின் மகிழ்ச்சி, அவளுடைய வதனத்தில் பிரதிபலித்தது.



# யுத்தம் முடிந்தது

மாலு

ரேடியோவைத் திறந்து விட்டால் போதும். உடனே அம்பியும் அங்கச்சியும் அங்கு வந்துவிடுவார்கள். அன்று அம்மாவும் இல்லை; அப்பாவும் இல்லை. என்ன செய்வது என்று தெரியாமல் கடைசியில் தாங்களே ரேடியோவைத் திறந்து வைத்தனர்.

“இது பெர்லின். இப்பொழுது ஹிட்லர் பேசப் போகிறார்” என்று சத்தம் வந்தது. ஹிட்லர் என்னதான் சொல்லுகிறான் பார்ப்போமே என்று சிறிது நேரம் பேசாமல் இருந்தனர். ஹிட்லர் ஜெர்மனியின் சுதந்திரத்தைப் பற்றி ஸோல்ஜர்களுக்குச் சிறிது நேரம் உபதேசம் செய்த பிறகு, இந்தியாவில் காந்தி இருக்கிறானே. அவன் சோம்பேறி! இந்திய மக்களையெல்லாம் அவனைப் போல் சோம்பேறிகளாக மாற்றி விட்டான். அஹிம்சையாம் அஹிம்சை என்று காந்தி மகானைத் திட்ட ஆரம்பித்து விட்டான். அம்பிக்கும் அங்கச்சிக்கும் வந்த கோபத்திற்கு எல்லையில்லை. எப்படியாவது அந்த ஹிட்லர் பயலைக் கொன்று தீர்த்துவிட வேண்டும் என்று தீர்மானித்து விட்டனர். அந்த ஆத்திரத்தில் ரேடியோவில் ஒரு கல்லைத் தூக்கிப் போட்டு விட்டு, ஜெர்மனிக்குச் செல்வதற்காக விமான நிலையத்தை நோக்கி ஓடினர். அங்கே இவர்கள் போன அதிர்ஷ்டம் ஒரு விமானம்கூட இல்லை. கடைசியில் ஒரு விமானம் வந்து இறங்கியது. குழந்தைகள் இரண்டும் அந்த விமானத்தில் ஏறிக்கொண்டு ஜெர்மனிக்குச் சென்றனர். நேரே பெர்லினில் போய் இறங்கி ஹிட்லரிடம் சண்டைக்குப் புறப்பட்டனர். நாஜி ஹிட்லர் அந்தக் குழந்தைகளுடன் சண்டை போட முடியாமல் பக்கத்திலிருந்த டாங்கியில் ஏறிக்கொண்டு துணைக்கு முஸோலினியைக் கூப்பிடப் போனார்.



என்ன ஆச்சரியம்! குழந்தைகள் ஏறிவந்த விமானம் டாங்கியாக மாறி விட்டது. அந்த டாங்கியில் உட்கார்ந்து கொண்டு மிஷின் பீரங்கியால் ஹிட்லர் டாங்கியைச் சுட்டுக்கொண்டே துரத்த ஆரம்

பித்து விட்டனர். ஹிட்லர் டாங்கி யின் பின்பக்கம் எல்லாம் சல்லடைக் கண்களாகி விட்டது. முஸோலினி யிடம் போய்ச் சேருவதற்குள் டாங்கி பூராவும் சேதமாகி விட்டது.

முஸோலினியும் ஹிட்லரும் சேர்ந்து கொண்டு குழந்தைகளை எதிர்க்க ஆரம்பித்து விட்டனர். அப்பொழுதும் அவர்களால் குழந்தைகளுடன் சண்டைபோட முடியவில்லை. ஆகவே துணைக்கு டோஜோவையும் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று கடற் கரைக்கு வந்து கப்பலில் ஏறிக் கொண்டு ஜப்பானை நோக்கிப் போனார்கள்.

குழந்தைகள் தங்களுடைய டாங் கியை சமுத்திரத்தை நோக்கிவிட ஆரம்பித்தனர். ஹிட்லரும் முஸோ லினியும் ஆச்சரியப் படும்படியான சம் பவம் ஒன்று அப்பொழுது நடந்தது. அதாவது குழந்தைகளின் டாங்கி ஒரு யுத்தக் கப்பலாக மாறி விட்டது.

எதிரிகளின் கப்பலை நோக்கிச் சுட்டுக் கொண்டே குழந்தைகள் தங்கள் கப்பலைச் செலுத்தினர். எதிரிகள் ஜப்பானுக்குப் போய்ச் சேரும் முன்பே, டோஜோவுக்கு எப் படியோ விஷயம் தெரிந்து விட்டது. அவர் பெரிய யுத்தக் கப்பலுடன் ஹிட்லர்—முஸோலினிக்கு ஒத்தாசை யாக வந்து குழந்தைகளை எதிர்க்க ஆரம்பித்து விட்டார்.

குழந்தைகள் அவரைக் கண்டும் பயப்படவில்லை. கப்பலிலிருந்த பீரங்கி யினால் அவர்களுடைய கப்பலைச் சுட்டுத் தள்ளிக் கொண்டே இருந் தனர். டோஜோவின் கப்பல் குழந்தை களின் குண்டு பட்டு சமுத்திரத்துக் குள் மூழ்க ஆரம்பித்து விட்டது. ஹிட்லர், முஸோலினி, டோஜோ



மூவரும் ஒரு படகில் ஏறிக்கொண்டு தப்பிச் செலல முயன்றனர்.

குழந்தைகள் மேலும் அவர்களைத் துரத்திக் கொண்டே சென்றனர். ஹிட்லர், முஸோலினி, டோஜோ மூவ ரும் வேறு வழியில்லாமல் தங்கள் படகில் சமாதானக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு குழந்தை களை நெருங்கினர்.

"எங்கள் காந்தி மகானை இனிமேல் திட்ட மாட்டீர்களே?" என்று குழந்தைகள் கேட்டன.

"மாட்டோம், மாட்டோம்!" என்று கன்னத்தில் போட்டுக் கொண்டே. "உங்கள் காந்தி மகான் தான் உலகத்திலேயே பெரியவர். அவர் காட்டும் வழிதான் சிறந்தது!" என்று சொல்லி எதிரிகள் சரணாகதி யடைந்தார்கள்,

உடனே குழந்தைகளின் கப்பல் ஏரோப்ளேனாக மாறி விட்டது. "நாடு பிடிக்கும் ஆசை எங்களுக்குக் கிடையாது; எந்த நாட்டையும் அடி மைப்படுத்தும் நோக்கமும் எங்களுக் குக் கிடையாது. நாங்கள் சொலவ தெல்லாம் எங்கள் மகாத்மாவின் பேச்சை நீங்கள் கேட்க வேண்டுமென் பதுதான்!" என்று சொல்லிக் கொண்டே குழந்தைகள் விமானத் தில் ஏறிக் கொண்டனர்.



## 1957-ம் வருஷத்திய 3% வட்டி

# விக்டரி லோன் பத்திரங்கள்

## வாங்குவதெப்படி



**மிகவும் எளிது.** நீங்கள் உங்கள் பாங்கிகளுக்கு எழுதினால் மட்டும் போதுமானது. அவர்கள் எல்லா ஏற்பாடுகளையும் செய்து விடுவார்கள். இல்லாவிட்டால், பம்பாய், கல்கத்தா, சென்னை, டில்லி, கான்பூர் ஆகிய ஊர்களிலுள்ள இந்திய ரிசர்வ் பாங்கிகளிலும், மற்ற ஊர்களிலுள்ள இந்திய இம்பீரியல் பாங்கியின் கிளைக் காரியாலயங்களிலும் அல்லது எந்த அரசாங்க கஜானாவிலும் நீங்கள் மனுச்செய்து கொள்ளலாம்.



**உங்கள் விகிதாச்சாரம்.** வருஷத்திற்கு இரண்டுமுறை அதிகாரிகளால் உங்களுக்கு அனுப்பப்படும். அதை ஒரு சாதாரண 'செக்' போலவே நீங்கள் மாற்றிக் கொள்ளலாம். அல்லது அந்தொகையை உங்கள் கணக்கில் வரவுவைத்துக் கொள்ளும்படி உங்கள் பாங்கர்களுக்குத் தெரிவிக்கவும்.

**எவ்வளவு தொகையானாலும் சரி.** மறு அறிக்கை வரையில் உங்கள் விருப்பம் போல், எவ்வளவு தொகையானாலும் இதில் போட்டு வைக்கலாம். நீங்கள் தொகை சேமிக்க சேமிக்க, இந்த கடன் பத்திரங்களை வாங்கிக்கொண்டே போகலாம்.



**உங்கள் முதல் பத்திரமாயிருக்கிறது.** 1957-ம் வருடத்திய 100-க்கு 3 வட்டி விக்டரி கடன் நடத்துகிறவர்கள் இந்திய அரசாங்கத்தார். அவர்கள் கொடுக்கும் பிராமிசரி நோட்டுக்களும் ஜாமீன் பத்திரங்களும் 1957-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 1-ம் தேதி அதன் அசல் தொகை திருப்பிக் கொடுத்து விடப்படும் என்று இந்திய அரசாங்கத்தைக் கட்டுப்படுத்துகின்றன.

**100-க்கு 3 வட்டி** நீங்கள் போடும் முதலின் பேரில் நிச்சயமாகக் கொடுக்கப்படும்.

[illegible] இடங்களில் நீங்கள் போட்டுவைக்கும் தொகைக்குத்தான் பூரண பாதுகாப்பு இருப்பதை. முறைப்படி வட்டிகள் வரும். மதிப்பு குறைந்து விடுமென்றோ, நஷ்டமாகி விடுமென்றோ அஞ்சவேண்டியதில்லை. உங்கள் பணத்தைப் போட்டு வைப்பதில் நீங்கள் ஜாக்கிரதையாயிருக்கிறவர்களானால், உங்கள் பணத்தைப் போட்டுவைக்கும் முன்னும் நீங்கள் கவனிக்க வேண்டியது இதுதான்.

செலவைக் குறைத்து சேமிப்பைப் பெருக்கு

## 1957-ம் வருஷத்திய 3% வட்டி

# விக்டரி லோன்

## பத்திரங்களை வாங்குங்கள்

AAA 1160 TH

இந்திய அரசாங்க நிதி இலாகா வெளியீட்டது

# பாரதியார் ஞாபகார்த்த நிதி

சென்ற இதழில் "இருபத்தைந்து ரூபாய்க்கு உட்பட்ட நன்கொடைகள்" என்று குறிப்பிட்டிருந்த ரூபாய் 159—1—1-க்கு விவரம்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீ மூ. பெ. சுப்பா செட்டியார், இராமச்சந்திரபுரம், திருநெல்வேலி | 11 | 0 | 0 |
| ஒரத்தநாடு விடுதி மாணவர்கள், ஒரத்தநாடு. (ஸ்ரீ வி. நாராயணசாமி மூலம்) | 10 | 12 | 0 |
| ஸ்ரீமதி பெ. சி. வ. சரஸ்வதி பிரகாசம், விருதுநகர் | 10 | 1 | 1 |

ரூ. 10—0—0: ஸ்ரீமான்கள் வி. எஸ். ஜனகமணி, சென்னை; டி. பெரியசாமி, கரூர்; என். கே. லோகய்யா நாயுடு, திம்மல்கேரி.

ரூ. 6—8—0: நான்காவது பாரம் மாணவர்கள், எஸ். எச். எஸ். வி. ஹைஸ்கூல், சிவகாசி; ரூ. 5—7—0: மானேஜர் ஏ. ஐ. எஸ். ஏ. காதி வஸ்திராலயம், அவனாசி; ரூ. 5—4—0: மாணவர் முன்னேற்றக் கழகம், நாகப்பட்டணம்; ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் பி. என். எல். ஆர்எம். என். நாராயணன், அலவக்கோட்டை, இராமநாதபுரம்; எம். முத்தையா, நடுவிற்பட்டி, எட்டயாபுரம்; என். ஆர். கிருஷ்ணராவ், எஸ். இ. ஏ. சி.; என். எம். நாகராஜா, பாலன் கோடா, இலங்கை; எஸ். ராஜா, பேட்டை, இலங்கை; பி. மாரிமுத்து, பேட்டை, இலங்கை; எம். சிவராஜா, கொழும்பு; எம். வி. அய்யர், கொளாபா, பம்பாய்; பி. கிருஷ்ணமூர்த்தி, திருப்பத்தூர், இராமநாதபுரம் ஜில்லா; பி. வி. ஸ்ரீனிவாசன், பவானி; ரூ. 3—2—0: திருச்செங்கோடு போர்டு ஹைஸ்கூல் 4-வது பாரம் மாணவர்கள்; ரூ. 3—0—0 ஸ்ரீமதி எஸ். என். ராஜம், சாரதாலயம், திருச்சி; ஸ்ரீ மண்டல மாணிக்கம் கூயர்நா ஆண் பாடசாலை, மண்டல மாணிக்கம், (ஹெட்மாஸ்டர் மூலம்): ரூ. 2—2—0: எம். கிருஷ்ணன், ஜாம்ஷெட்பூர்; ரூ. 2—0—0: ஸ்ரீமதி சாதாபாய், ஜானகன், பம்பாய்; ரூ. 1—12—0: ஸ்ரீ வி. பூமீஸ்வரன், ரேணிகுண்டா; ரூ. 1—1—0: எஸ். எஸ். வாஸன், மாதுங்கா, பம்பாய்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் காமாக்ஷி செட்டியார், விருதுநகர்; வி. வெங்கடாசலம், நாகமநாயக்கன்பட்டி; சு. கிருஷ்ணசாமி நயினார், விழுப்புரம்; ஆர். செல்லையா முதலியார், காட்டுமன்னார் கோவில்; ஜி. துரைசாமி நாயுடு, காட்டுமன்னார்கோவில்; எச். ஏ. ரவிந்தரன், காட்டுமன்னார்கோவில்; எஸ். ராமச்சந்திரன், பாண்டிச்சேரி; வி. ஆர். நாகராஜன், திருச்சி; பி. எம். திருஞானம், ராஜாமடம்; எம். அரசப்ப பிள்ளை, கம்பம், மதுரை; ஆர். துரைசாமி செட்டியார், தெட்டலேலம்பட்டி, துரையூர்; பா. சுப்பராயலு, உடுமலைப்பேட்டை; வெ. ராமசாமி, உடுமலைப்பேட்டை; ப. ந. பண்டாரம், மதுரை.

சென்ற இதழில் "அன்பர்கள் மூலம் வந்த நன்கொடைகள்" என்று குறிப்பிட்டிருந்த ரூ. 1221—5—0-க்கு விவரம்.

நியூடெல்லி, கர்நாடக சங்கீத சபா தலைவர் ஸ்ரீ ஏ. வி. ஒய். நாராயணன் பி. ஏ. மூலம்:

ரூ. 15—0—0: ஏ. வி. ஒய். நாராயணன்; ரூ. 10—0—0: ஸ்ரீ டி. கே. அநந்தசாமி, ஸ்ரீமதி சரஸ்வதி சுப்ரமண்யம்; ரூ. 5—0—0: ஸ்ரீமான்கள் சங்கீதபூஷணம் வி. எஸ். கணபதி, ஏ. சுப்பையா, சங்கீத வித்வான் வி. எஸ். சிதம்பரம், வி. கிருஷ்ணமூர்த்தி, ஆர். மகாதேவன், வி. சிவராமய்யர், எஸ். ஜயவக்ஷகர், ஏ. சுப்பிரமணிய அய்யர், சி. கணேசன், வி. கிருஷ்ணசாமி, பாரதி பக்தன், ஸ்ரீமதி பார்வதி கைலாஸபதி, மிஸஸ் சுப்பையா, ஸ்ரீமதி லலிதா சுவாமிநாதன்; ரூ. 3—0—0 சங்கீத வித்வான் கே. பத்மநாபன், ஆர். சுப்பிரமணியம், ஸ்ரீமதி ஜானகி நரஸிம்ஹன்; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் சங்கீத வித்வான் ஆர். கே. தம்பி, வி. எஸ். கோபாலன், எஸ். கோபாலகிருஷ்ணன், ஆர். ஆர். ஆசாரி, ஏ. வி. கிருஷ்ணசாமி, பி. கே. சுப்பிரமணியன், கே. பத்மநாபன், பி. கே. ராமானுஜம், கே. ஆர். வைத்தியநாதன், எஸ். சுப்பிரமணியன், எம். ஜி. பால சுப்பிரமணியம், கே. சிவ சுப்பிரமணியன், மூன்று அநுதாபிகள்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் சி. ஐ. வெங்கடேஸ்வரன், சி. ஏ. கோபால கிருஷ்ணன், எஸ். கிருஷ்ணசாமி, டி. கே. சேதுராமன், டி. ஆர். ராஜகோபாலன், கே. வெங்கட்டராமன், இ. எஸ். நாராயணன், எஸ். கிருஷ்ணஸ்வாமி, டி. அருணாசலம், வி எஸ். மணி, ஆர். கணேசன், ஆர். வி. நீலகண்டன், வி. சங்கரன், ஏ. ஆர். கிருஷ்ணசாமி, கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி, என். வெங்கடேசன், ஆர். ராமமூர்த்தி, கா. ஸ்ரீ சம்பத், கே. பி. நாயர், குப்புசாமி அய்யர், பி. வி. நரசிம்மன் கே. கே. வாசுதேவன், பி. எஸ். ராமசேஷன், ஆர். ஜி. பார்த்தசாரதி, எஸ். வி. முத்துஸ்வாமி, பி. வெங்கட்டராமன், ஜி. விஸ்வநாதன், புவனேஸ்வரி, எஸ். ராமமூர்த்தி, சி. எம். ராவ், எஸ். அரவமுதன், ஏ. வி. எஸ். நாராயணன், என். ராமசாமி, என். ஆர். சுப்பிரமணியன், வி. சுவாமிநாதன், எஸ். வி. ஆர். சாரி, கே. ராஜாராமன், எஸ். ஏ. தியாகராஜன், ஜே. எஸ். ராவ், கே. ஆர். பார்த்தசாரதி, எஸ். ஹரிஹரன், எம். வி. கிருஷ்ணய்யர், வி கே. மகாலிங்கம், சி. எஸ். ஸ்ரீனிவாசராவ், வி. எஸ். மணி, வெங்கட சுப்பய்யர், ஆர். சுப்புஸ்வாமி, கே. ஆர். ராமமூர்த்தி, ஆர். எம். சுந்தரம், பி. எஸ். வைகுண்டமையா, ஜே. ராம்ஜீ, எஸ். கண்ணன், சங்கரசாமி ஐயங்கார், ஆர். கிருஷ்ணமூர்த்தி, வி. ராஜாமணி, எஸ். ராஜகோபால், வி. எஸ். பரமேஸ்வரன், கே. வி. ஆர்., ஜயராம சாஸ்திரிகள், எஸ். தஞ்சகண்டன், வி. நடராஜன், எஸ். நாராயணஸ்வாமி, டி. வி. ஸ்ரீராமன், ஆர். சதாசிவம், வி. ரமணி, ஜி. கே. மூர்த்தி, டி. ஆர். வெங்கட்டராமன், பாரதி பக்தன், பாரதி அபிமானி, உபகாரி, அநுதாபி.

ஆக ரூ. 215—0—0

கல்கத்தா, சோம. கருப்பையா செட்டியார் மூலம்:

ரூ. 25—0—0: ஸ்ரீமான்கள் கே. வி. ஆர். எம். ராமநாதன் செட்டியார், எஸ். எஸ். வி. நடராஜ பிள்ளை, பி. எஸ். சுப்பிரமணிய பிள்ளை, சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (மதராஸ்) லிமிடெட்; 11—0—0: ஸ்ரீமான்கள் எஸ். எட்டுமண பிள்ளை, டி. தேவபிரான் பிள்ளை, எம். எஸ். ஆறுமுகம் பிள்ளை, எஸ். வி கே. சிவகுருநாத பிள்ளை, சவுத் இந்தியா கார்ப்பரேஷன்; ரூ. 5—0—0: தேஜ்ம்ஸ் பெர்பியூமரி கம்பெனி; ரூ. 1—0—0: ஸ்ரீ சோம. கருப்பையா செட்டியார்.

ஆக ரூ. 161—0—0

பிள்ளை, வி. கே. கோவிந்தன், எஸ். சுந்தரம், எச். மதுவபூப்கான் சாயபு: ரூ. 0—14—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை.

ஆக ரூ. 20—0—0

திருச்சிறுப்பள்ளி, வி. வி. எஸ். ஆபீஸ், ஸ்ரீ பி. என். நாகப்பன் மூலம்:

ரூ. 2—0—0: ஸ்ரீ தி. பா. கோபாலகிருஷ்ணன்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் தி. எ. ராமானுஜலு நாயுடு, பி. என். நாகப்பன், ஆர். ஞானப்பிரகாசம், எஸ். ஆறுமுகம், என். ராமகிருஷ்ணன், ஆர். வைத்தியநாதன், கே. வீரராகவ அய்யங்கார், தி. பொ. சண்முகசுந்தரம்: ரூ. 8—8—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடை (தபால் செலவு நீங்கலாக.)

ஆக ரூ. 18—2—0

கான்பூர், ஸ்ரீ ஏ. ராஜமாணிக்கம் மூலம்:

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கணபதி, சாம்பன், சுந்தரம், கோபாலசாமி, மணி, சங்கரலிங்கம், சுவாமிநாதன், நடேசன், ராஜரத்னம், சோணாசலம், கைலாசம், சதாசிவம், பாலகிருஷ்ணன், வெங்கடாசலம், ஸ்ரீனிவாஸன்.

ஆக ரூ. 15—?—0

இலங்கை, கோனுபிட்டியா, ஸ்ரீ கே. பி. ஆறுமுகம் மூலம்:

ரூ. 3—0—0: ஸ்ரீ கே. பி. ஆறுமுகம்; ரூ. 2—0—0: ஸ்ரீமான்கள் செ. சுப்பையா, ஆ. ராமசாமி செட்டியார், கே.என். பிச்சையா; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் மு. மல்லப்ப செட்டியார். ஆர். சுப்பராய செட்டியார், எஸ். ரூபன் நாயுடு. ச. நாராயணசாமி, ந. பி. சுலைமான், கா. கடக்கரை செட்டியார்.

ஆக ரூ. 15—0—0

பெரியகுளம், ஸ்ரீ செங்கபுரம், ஸ்ரீ எஸ். ஆர். பெருமாள்சாமி மூலம்:

ரூ. 1—8—0: ஸ்ரீ எஸ். ஆர். பெருமாள்சாமி; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் ரு. வை. நாராயணசாமி, ஆர். ஸ்ரீநிவாஸன், மா. ராமசாமி, எம். கே. ஆதிமூலம், எஸ். பெத்துசாமி தேவர், ரு. வை. பெருமாள்சாமி, எஸ். நாராயணசாமி; ரூ. 1—8—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடைகள்.

ஆக ரூ. 10—0—0

கோனூர்பெட், ஸ்ரீ எஸ். சுப்பிரமணியன் மூலம்:

ரூ. 2—0—0: ஆர் எம். ஷண்முகம் செட்டியார், ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் எஸ். சுப்ரமண்யன், டி. சுந்தரமய்யங்கார், பி. ஜெகன்னாதய்யர், எஸ். ஷண்முகம், ஆர். ராமசாமி அய்யங்கார், அள. மு. அளகப்ப செட்டியார்.

ஆக ரூ. 8—0—0

தூத்துக்குடி, கல்வி எஜண்டு, ஸ்ரீ எட்வர்ட் சாமுவேல் மூலம்:

ரூ. 5—0—0: ஸ்ரீ பி. எஸ். டி. எஸ். திரவிய ரத்தின நாடார்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் டி. எஸ். வீரபாகு செட்டியார், எம். ஏ. ஜோஸப், மணி ஐயர்.

ஆக ரூ. 8—0—0

பரமக்குடி, ஏ.ஜ.எஸ்.ஏ. காதி வஸ்திராலயம் மானேஜர் மூலம்:

ரூ. 1—?—0: ஸ்ரீ என். எஸ். ஜயபப்பிரமமம்; ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கே. ஏ. சுந்தரராஜன், ஆர். சுப்பையன்; ரூ. 3—0—0: ஒரு ரூபாய்க்குட்பட்ட நன்கொடைகள் (தபால் செலவு நீங்கலாக.)

ஆக ரூ. 6—0—0

நாகர்கோவில், கல்வி எஜண்டு, ஸ்ரீ கே. கும்பலிங்கம் மூலம்:

ரூ. 3—0—0: ஸ்ரீ எஸ். திரவிய நாடார், எம்.எல்.ஏ.: ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் எஸ். மாடசாமி முதலியார், என். வி. சங்கரலிங்கம் பிள்ளை.

ஆக ரூ. 5—0—0

பம்பாய், ஸ்ரீ பி. என். வீரராகவன் மூலம்:

ரூ. 1—0—0: ஸ்ரீமான்கள் கே. வெங்கடாசாரி, கே. கண்ணன், பி. எம். வீரராகவன்.

ஆக ரூ. 3—0—0

---

## கிட்டுவின் கேள்வி - 6.



கிட்டு:—அப்பா, ஏன் இவர்கள் எல்லோரும் அந்த போர்டு மீது போய் முட்டிக் கொள்கிறார்கள்? அது என்ன போர்டு, அப்பா?

தகப்பனார்:—இது தெரியவில்லையா, கிட்டு? "இந்தப் பக்கம் ரோடு சரியில்லாததால் இருட்டில் நடந்து போகிறவர்கள் ஜாக்கிரதையாகப் பார்த்துப் போகவும்" என்று எழுதி வைத்திருக்கும் போர்டுதான் அது.

# ஸமரஸக் கீர்த்தனைகள்

ஸ்வாமி சுத்தானந்த பாரதி

சென்ற வருஷம் வங்காளத்தில் லீலை புரிந்த பஞ்சத்திற்குத் தாதுவருஷப் பஞ்சம் மூத்தண்ணா என்றால் பார்த்துக் கொள்ளுங்கள். "பரம்பரை ஆண்டியா, பஞ்சத்துக் காண்டியா?" என்ற பழமொழி வழங்குகிறதே, அது தாது வருஷந்தான் கிளம்பியது. பஞ்சத்தில் அடிபட்ட ஏழை, செல்வர் அனைவரும் பகல் வேஷமும், இரா வேஷமும் போட்டு வயிற்றுப்பருக்கு வகை தேடினார்கள். மண்டித் தண்ணீரில் வெள்ளை வேட்டியை நனைத்தணிந்து, சாம்பலைப் பூசிக் கொண்டு பரமசிவம் என்று கிளம்பிய சாமியார்கள் பலர். குறி கோடாங்கி, சோதிடம், மந்திரம் என்று கிளம்பினவர் பலர். தட்டான் வேஷம் போட்டுத் தங்கத்தைத் தட்டிக் கொண்டு, கம்பி நீட்டினவர் பலர். இன்னும் ஆயிரம் எத்துக் கதைகள் நடந்தன. செல்வப் பணக்காரரை மோப்பம் பிடித்து வந்து திருட்டுத் திருவிளையாடல் நடத்திய மகானுபாவர்கள் சிலர் போலீஸ் புலிகளிடம் அகப்பட்டுக் கொண்டனர்.

நாடெங்கும் இப்படி நடக்கும்போது மாயவரத்தில் திருவிளையாடல் இல்லாமலா போகும்? அக்காலந்தான் ஸாது வேதநாயகம் பிள்ளை மாயவரம் முனிசீபாயிருந்தார். அவர் கச்சேரி ஆற்றோரத்தில். அவரிடம் மோசடி வழக்குகள் ஏராளமாக வரும். கச்சேரிக்கு அருகிலேயே வேதநாயகம் கஞ்சித் தொட்டி வைத்து, பஞ்சத்தில் அடிபட்ட ஏழைகளுக்குக் கஞ்சி வார்த்தார். கந்தை யணிந்தவர்களுக்கு நாலு முழம் வேட்டி யளித்தார். இந்தப் பரோபகாரத்திற்காக அவர் திருவாவடுதுறை, தருமபுரம் முதலிய மகா சந்நிதானங்களிட மிருந்தெல்லாம் உதவி பெற்றார்.

வேதநாயகம் உத்தியோக முறுக்கிலே தான் இருப்பார். சர்க்கார் உத்தியோகமென்றால் 'சல்லியானாலும் சர்க்கார் சம்பளம்' என்று அக்காலம் பிரமாதப்படும். கைநிரம்ப வாங்கும் முன்சீபைப் பற்றிக் கேட்க வேண்டுமா? எல்லாருக்கும் அவரிடம் பயபக்தி யுண்டு. அதிலும் தருமவான், பரோபகாரி, வித்வான், கவி என்று [illegible] கமகங்கள் ஏறிக் கொண்டு போனால் ஜனங்களின் மரியாதைக்குக் கேட்க வேண்டியதில்லை. முனிசீப் வேதநாயகம் 'சொல் உண்மை' என்றால், ஆள் அந்தரங்க மெல்லாம் கக்கித் தீரவேண்டும். கஞ்சித் தொட்டியில் உண்மையான ஏழை யார், பகல் வேஷர் யார் என்பதைக் கண்ணிலும் உதட்டிலும் புகுந்து பார்த்து விடுவார்.

ஒரு நாள் ஒரு பெரிய சாமியார் சடைமுடி, தண்டம், கமண்டலங்களுடன் அவர் முன் வந்து "சோதிடம் தெரியும்; மாந்திரீகம் தெரியும்" என்று திருவாய் மலர்ந்தார் "சாமியாரே, உமக்கு வயிறு நிண்டினால் சோறு தருகிறேன்" என்றார் பிள்ளை. "நாம் பத்து நாளாக உபவாசம். இன்றே பாரணை" என்று சாமியாரும் சம்மணங்கொட்டி உட்கார்ந்தார். பிள்ளை சமையற் காரனிடம் அவரை 'மேடேவர்' செய்துவிட்டார். சாமியார் ஒரு பானைச் சோற்றையும் காலி செய்துவிட்டு, இன்னொரு தெருவில் ஆபாசத் திருவிளையாடல் செய்து அந்தர்தானமாய் விட்டார். இதைக் கண்டதும் வேதநாயகம் ஒரு கீர்த்தனம் பாடினார். "புண்ணியம்போல் பாபம் மனமே" என்பது. அதுதான் அவர் முதலிற் பாடிய அனுபவக் கீர்த்தனம்.

கையிலே பிடிப்பது ஜெபமாலை
 கக்கத்தில் வைப்பது வேசகனைக் கோலை
பருக்கைப் பசியில்லாத போதுஉபவாசம்
 பசித்தால் ஒருபானை பருக்கையும் நாசம்.
தானம் பிறர்அறியக் கொடுப்பதோர் கோடியே
 தனியே வந்தவனுக்குத் தான் தடியடியோ
அங்கமெல்லாம் கரு மேகவியாதி
 அதனை மறைக்கமெய்யில் அணிவோம் விபூதி

என்று போலி ஞானிகளின் துர்க்குணங் களை நகை ததும்பப் பாடினார் புலவர் மணி. அக்காலம் செல்வர் தடபுடலும் இடம்ப நாடகமும் கண்டு அவர் அருவருத்தார். தற்காலப் பொதுவுடைமை ரஷ்யாகூட வியக்கும் படியாக ஒரு பாட்டுப் பாடினார்.

ஜீவித்தும் இருப்பிடம் ஒருமுழ மட்டே
 பாரிலே நமக்கேன் பலமனைக் கட்டே!
விஸ்தார மாகப் பொருள் வேண்டுதல் தாழ்வு
 செத்தால் தெரியுமே செட்டியார் வாழ்வு
பூதமானாலும் உண்ணப் போதும் மாகாணி
 ஆதலால் நமக்கேன் ஆயிரம் காணி?
வெறுங்கழுத் தாயிருந்தால் விக்குமோ
 தொண்டை
 கடுக்கனில்லாவிட்டால் காதுகேளாதோ?

என்றெல்லாம் வெறுத்து வாங்குகிறார் சமரச வேதர். உலகின் ஏற்றத் தாழ்வையும் கால நிலையையும் சமய வாதங்களையும் பார்த்துச் சலித்து, வேதநாயகம் நித்தியானந்தத்தைத் தேடும் வழியைத் தினம் தினம் சிந்திக்கிறார். "மனமே, வீண் பொருளில் வைத்தியங் கொள்ளாதே! காண்பதெல்லாம் நில்லாதே. சம்பத்திற்கு ஆயிரம் தத்து. தாதுப் பஞ்சத்திலேயே எத்தனையோ செல்வர் ஓட்டாண்டிகளானார். ஆதலால் சத்திய மார்க்கம், சாது சங்கம், நித்தியானந்தம் இவற்றைத் தேடு" என்று பாடத் தொடங்கினார். பின்னையவர்கள் காலை அனுட்டானமானதும் பைபிள், சுவிசேஷ கீதம், திருக்குறள் ஆகிய மூன்றையும் பாராயணம் செய்தவுடன், ஒரு கீர்த்தனம் பாடுவதுண்டு. அதை அன்று மாலை கோபாலகிருஷ்ண பாரதியாரிடம் பாடிக்காட்டுவார். அவர் மெட்டமைத்து இனிமையாக இசைப்பார். பிறகு கோர்ட்டில் இருந்த சில சங்கீத வித்வான்கள் பாடம் பண்ணி முன்சிபின் முன் பக்க வாத்தியங்களுடன் கச்சேரி செய்வார்கள். அதற்கு ஊர்ப் பிரமுகர்கள் வருவார்கள்.

இந்த மாதிரி தாது வருஷப் பஞ்சத்தில் வேதநாயகம் பிள்ளை நாட்டுக்குச் சேர்த்த தனித்த செல்வமோ சமரசக் கீர்த்தனை. அவர் கத்தோலிக்க கிறிஸ்தவர். ஆனால் அவர் பாடல்கள் இந்து, முஸ்லிம், கிறிஸ்து மதங்களுக்கெல்லாம் பொதுவாக அமைந்திருக்கின்றன.

எல்லா உலகமும் இன்புற் றிருக்கவே
பொல்லாங் கொழிந்து புவிதழைக்க — நல்வேத
நாயகனார் பாடிய ஞானமணிப் பாசுரங்கள்
வாயகத்தில் ஊற வழங்கு.

# தியாக புருஷர்

பகீரதன்

"வரவேணும், வரவேணும்!" என்று அப்பொழுதுதான் வந்து கொண்டிருந்த என் நண்பர் ஸ்ரீனிவாச சர்மாவை வரவேற்று உபசரித்தேன்.

"நேற்றே வருவதாக இருந்தேன். இடையே ஒரு விருந்துக்குப் போகவேண்டி நேர்ந்து விட்டது!" என்றார் சர்மா.

"அப்படி என்ன விருந்தோ?"

"அந்தப் பயல் பூங்குடி ஜமீன்தார் இருக்கிறானே. அவன் என்னவோ தேர்தலில் வெற்றி பெற்று விட்டானாம். அதற்காகப் பிரமாத மாலை விருந்து. நான் வராவிட்டால் விருந்தையே நிறுத்தி விடுகிறேன் என்றான். இதென்னடா வம்பாய்ப் போச்சு என்று போய்த் தொலைந்தேன்......"

"உம்......"

"அங்கே உதயசங்கரின் நாட்டியம் கூட என்று எனக்குத் தெரியாது. தெரிந்தால் போயிருக்கவே மாட்டேன்! அவன், நான் சில நாட்கள் தாகூருடன் இருந்தபோது எனக்குச் சிநேகமானவன். 'இருந்து என் நாட்டியத்தைப் பார்த்துவிட்டுத்தான் போகவேண்டும்' என்று ஒற்றைக் காலால் நின்றான். சிநேக தோஷம், 'மாட்டேன்' என்று சொல்ல முடிகிறதா? இருந்து தொலைந்தேன்......"

"உம்......நீங்கள் தாகூருடன்கூட இருந்திருக்கிறீர்களா?"

"ஆமாம்; மகாத்மாவினால் தான் எனக்கும் அவருக்கும் பரிச்சயம்!"

"ஓஹோ!"

"அதுகூட என்னுடைய அந்த சொந்த சேவையைப் பற்றி நம்ம மாஜி காங்கிரஸ் தலைவர் ஸ்ரீனிவாச ஐயங்கார் இருந்தாரே, அவர் மகாத்மாவிடம் பிரமாதமாகச் சொல்லி விட்டார். அதைக் கேட்ட மகாத்மாவும், 'சொல்லில் ஒன்றும் செயலில் ஒன்றுமாக இருக்கும் ஆயிரம் பேர் காங்கிரஸில் இருப்பதைக் காட்டிலும் உங்களைப் போன்ற ஒருவர் இருந்தால், அதுவே எவ்வளவோ மேலானது' என்று என்னிடம் உயிரையே வைத்து விட்டார்!"

"ஆமாம், ஆமாம்; தங்களைப் போன்ற ஒருவர் இருந்தாலே போதும்தான்!"

"நம்ம சத்தியமூர்த்தி என்னைப் பற்றியும் என் சேவையைப் பற்றியும் எத்தனையோ கூட்டங்களில் புகழ்ந்து சொல்லியிருக்கிறாரே, நீர் கேட்டதில்லையா? இந்தக் காலமே தன்னைத்தானே விளம்பரம் செய்து கொள்கிறவனுக்குத் தானே மதிப்புக் கொடுக்கிறது? என்னையும் என்ன, வயிற்றுப் பிழைப்புக்காக சேவை செய்கிறவன் பேருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டு தேசசேவையில் புகுந்தவன் என்று நினைத்து விட்டீர்களா? மதுவிலக்குக்காக மறியல் செய்து மண்டை உடைபட்ட காயங்கூட இன்னும் மாறவில்லை, ஐயா!"

"இருக்கும், இருக்கும்."

"பொதுவாகச் சொல்லப் போனால், என்னைப் போல் தேசபக்தர்களும், சுயநலமற்ற பொதுநலத் தொண்டர்களும் கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் என்னுடைய அதிர்ஷ்டமோ தேசத்தின் துரதிர்ஷ்டமோ ஒரே ஒரு சின்ன கெட்ட வழக்கம் மட்டும் பிறவியிலேயே என்னிடம் அமைந்து விட்டது, ஸார்!"



"பரவாயில்லை. நீங்கள் இவ்வளவு பெரிய தியாக புருஷராய் இருக்கும் போது ஒரு சின்ன கெட்ட வழக்கத்தினால் ஒன்றும் குடிமுழுகிப் போகாது!"

"அதாவது, நான் மறந்துகூட உண்மையைச் சொல்ல மாட்டேன், ஸார்!" என்றாரே அந்தத் தியாக புருஷர், பார்க்கலாம்!



# விசித்திர மாப்பிள்ளைகள்

நீலா

இதுவரை எங்கள் வீட்டுக்கு மாப்பிள்ளைகள் மூன்று பேர்தான். மூன்று மாப்பிள்ளைகளும் மூன்று தனி ரகம். அப்பா ஏதோ புண்ணியம் செய்தவர். இந்த மாப்பிள்ளைகளைத் தேடுவதற்காக அவர் அதிக சிரமம் எடுத்துக் கொள்ளவில்லை. தவிர இந்தக் காலத்து மாப்பிள்ளைகள் மாமனாரைப் பாடாய்ப் படுத்தி வாயில் போட்டுக் கொள்கிறார்களே அது போல் என் அத்திம்பேர்கள் ஒருவரும் செய்வதில்லை.

விசு அத்திம்பேர்தான் எங்கள் வீட்டு பெரிய மாப்பிள்ளை. இவருக்குப் பதினாறு வயதில் கல்யாணம். கல்யாணமாகி பதினைந்து வருஷமாகிறது. ஆனால் இது வரையில் பதினைந்து நாட்கள் எங்கள் வீட்டில் தங்கியிருப்பாரா என்பது சந்தேகந்தான்.

அத்திம்பேர், வருகிறாரோ இல்லையோ, அக்கா கமலா மட்டும் அடிக்கடி பிறந்தகம் வந்துவிடுவாள். அவள் பிறந்தகம் வருவதற்குத் தகுந்தாற்போல் கல்யாணம், கார்த்தி, சீமந்தம், வளைகாப்பு, பூணூல் என்று ஏதாவது எங்கள் வீட்டிலும் வந்து கொண்டிருக்கும். அப்படி ஒன்றும் வரா விட்டால் மாமியாரிடமாவது சண்டை போட்டுக் கொண்டு வந்துவிடுவாள்!

அத்திம்பேர், "ஏன் சண்டை போட்டாய்?" என்று அக்காவைக் கேட்கமாட்டார். "ஊருக்குப் போகிறாயா? சரி, போய் வா" என்று சொல்லி டிக்கட் வாங்கிக் கொடுத்து ரயில் ஏற்றிவிடுவார்.

அவர் ஆபீஸ் வேலையாக அடிக்கடி சென்னைக்கு வருவார். வேலை முடிந்ததும் எங்கள் வீட்டிற்கு வராமல் அப்படியே ஊருக்குத் திரும்பி விடுவார்.

ரங்கு அத்திம்பேர் — இவர் சியாமளாவின் கணவர்.

இவருடைய பெயரும் ரங்குவின் பெயரும் ஒன்றாக இருப்பதால் முகத்தில் அடித்தாற்போல் ரங்குவைப் பெயரிட்டுக் கூப்பிட சியாமளாவிற்கு வாய் வருவதில்லை. ரங்குவைக் கூப்பிடத் தெரியாமல் விழிப்பாள். இந்தச் சங்கடத்தால் ரங்கு அவளுக்கு மட்டும் ராமுவாக இருக்கிறான்.

இந்த ரங்கு அத்திம்பேர் பலே கைகார ஆசாமி. இவரிடத்தில் ஸ்நேகம் வைத்துக் கொண்டவர்களோ பிறகு அவஸ்தைதான். சமயா சந்தர்ப்பம் தெரியாமல் கண்ட இடத்திலெல்லாம் ஓயாமல் பேசிக்கொண்டு நிற்பார். சியாமளாவும் பேச்சில் இவருக்குச் சளைத்தவளல்ல. இருவரும் இம்மாதிரி வாய் ஓயாது பேச்சாகப் பேசும் குணமானவர்களாதலால், அவர்கள் குழந்தையான அந்தக் கண்டு கோபுவும் பேச்சில் இருவரையும் உரித்துக்கொண்டு வந்துவிட்டான்.

வாயைத் திறந்தால் கிராமபோன் மாதிரி நிற்காமல் பேசும் மூவர்களுடைய குணமும் யாருக்கு எப்படி இருக்கிறதோ தெரியாது, எனக்குப் பரம வேதனையாக இருக்கிறது.

"என்னைப் போலவே ஓயாது பேசுபவளாகப் பார்த்து உனக்குக் கட்டிவிடுகிறேன்" என்று அத்திம்பேர் கருவுகிறார். நல்ல காலம்! முன்னதாகவே சொல்லி விட்டார்.

மூன்றாவது மாப்பிள்ளைதான் ராமமூர்த்தி அத்திம்பேர். ரொம்ப கோபக்காரர். ஏதோ ஒரு கம்பெனியில் மானேஜிங் டைரக்டராக இருக்கிறார். பெரிய வேலையிருப்பதால் எங்கள் வீட்டில் இவ

ருக்கு மதிப்பு அதிகம். இவர் நடபுடல் செய்வாரோ என்னவோ, ஆனால் இவர் வந்து விட்டால் எங்கள் வீடு நடபுடல் படுவது நிச்சயம்.

இவருடைய மனைவி வத்ஸலாவுக்கு எப்பொழுதுமே வேலை செய்ய வேண்டுமென்றால் மூக்கால் அழுகை. கணவன் மானேஜிங் டைரக்டராக இருப்பது இவளுக்குச் சௌகரியமாக இருக்கிறது. ஒருவரும் அவளுக்கு வேலையிடுவது இல்லை. ஏதாவது ஒரு நாவலை வைத்துக் கொண்டு படிக்கிறேன் என்று சோபாவோடு சோபாவாக உட்கார்ந்திருப்பாள். வத்ஸலா என்றால் என்ன காரணத்தாலோ என்னவோ எங்களுக்கெல்லாம் ஒரு மாதிரியாகத் தோன்றுகிறது. அவளைச் சீண்டி, சண்டைக் கிளப்புவதில் எங்களுக்குப் பரம சந்தோஷம். அத்திம்பேர் வந்திருக்கும் சமயத்தில் மாத்திரம் அம்மா நாங்கள் அவளுடைய ஜோலிக்குப் போனால் 'ஆ, ஆ' என்று அதட்டுவாள்.

இந்த அத்திம்பேர் வந்திருக்கும் சமயங்களில் எங்கள் வீட்டில் காலைக் காட்சிகள் கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். முதலில் செம்பு ஜலம், ப்ரஷ், பேஸ்ட் எல்லாமாகப் போட்டியுடன் உருண்டடித்துக் கொண்டு மாடிக்குப் போகும். பிறகு, சூடான புகை வரும் காப்பியைத் தூக்கிக்கொண்டு அண்ணா ஓடுவான். அவனைத் தொடர்ந்து ஹோட்டல் இட்டிலியைத் தூக்கிக்கொண்டு தம்பிப் பயல் ஓடுவான். அவன் பின்னால் 'ஹிந்து'வுடன் கோபு ஓடுவான். 'ஸெகண்ட் டோஸ்' காப்பி கலந்ததும் அதைக் கொண்டு போவதற்காக ரங்கு சமையலறை வாசற்படியருகில் ஓடத் தயாராக நின்று கொண்டிருப்பான்!



"வாத்தியாரே! என்னதான் கணக்கு தப்பாகப் போட்டிருந்தாலும், இப்படியா கை வீங்கும்படி அடிப்பது?"

"இல்லை செட்டியார்வாள். இவன் சரியாகத்தான் போட்டிருந்தான். இவனை விட்டு தப்பாகப் போட்டவர்களையெல்லாம் குட்டச் சொல்லியதில் கை வீங்கிப் போய்விட்டதுபோலிருக்கிறது."

இந்த அத்திம்பேரைப் பற்றி அதிகம் எழுதினால் அவர் என்மேல் கோபம் கொண்டு விடுவாரோ என்று பயமாக இருக்கிறது.

"மூன்று மாப்பிள்ளைகளைப் பற்றி எழுதினாயே, நான்காவது மாப்பிள்ளையைப் பற்றி யார் எழுதுவது?" என்று இந்தக் கட்டுரையைப் படித்துவிட்டு அண்ணா கேட்டான்.

"நான்காவது மாப்பிள்ளைதான். அவர் தான் இன்னும் வரவில்லையே!" என்றேன்.

"மாப்பிள்ளை வந்து விடுவான். ஆனால் நீதான் எழுத முடியாது. உன் அடம் நாளுக்கு நாள் நிலைக்கேறுகிறது. அதையெல்லாம் அடக்கி உன்னைப் பெட்டிப் பாம்பாகச் செய்யும் மாப்பிள்ளையாகப் பார்த்துத்தான் உன்னைக் கொடுக்கப் போகிறேன். அப்பொழுது நீ கட்டுரைகள் எழுதுவதைப் பார்க்கலாம், இரு" என்கிறான் அண்ணா.

அதையுந்தான் பார்ப்போமே!

# கம்பர் தரும்




டி.கே.சி.

## 91. நடுக் காட்டில் துக்கச் செய்தி

மனசில் உண்டான துயரத்தை நீக்குவதற்கு நம்முடைய முன்னோர்கள் ஒரு வழி கண்டு பிடித்திருக்கிறார்கள். தண்ணீரில் குளித்து விட்டால் உடம்பில் உண்டாவ வெப்பத்தோடு மனசில் உண்டான துயரமும் போய்விடும். அனுபவத்தில் காணக் கூடிய காரியம் இது.

* * *

தந்தை தசரதன் இறந்த செய்தியைக் கேட்ட ராமனது உள்ளம் ஆற்ற முடியாத துயரத்துக்கு உள்ளாயது.

வசிஷ்டர் சொற்படி நீரில் முழுகிக் கரை யேறுகிறான்.

புக்கனன் புனலினில்
முழுகிப் போந்தனன்,
தக்கதன் மறையவன்
சடங்குக் காட்டத்,தான்
முக்கையின் நீர்,விதி
முறையின் சந்தனன்,—
ஒக்கநின்(று) உயிர்தொறும்
உணர்வு நல்குவான்.

[புக்கனன் புனலினில் முழுகிப் போந்தனன்: ஆற்றுக்குள் இறங்கிக் குளித்துவிட்டுக் கரையேறினான்: முக்கையின் நீர் விதிமுறையின் சந்தனன்: சாஸ்திரப்படி தந்தையின் ஆன்மப் பிரீதிக்காகக் கையினால் மூன்று தடவை நீர் வார்த்தான்; ஒக்க நின்று உயிர்தொறும் உணர்வு நல்குவான்: ராமன்: ஜீவப் பிராணிகளுக்குள்ளே நின்று உயிர்த் தத்துவமோ, உணர்ச்சித் தத்துவமோ எல்லாவற்றையும் கொடுக்கிறவன் கடவுள்தான். அந்தக் கடவுளின் அவதாரமான ராமன் தந்தைக்கும் நீர்க் கடன் மூலமாகப் புத்துயிர் கொடுக்கிறான் என்பது விஷயம்.]

பரம ஞானத்தில் எவ்வளவு திளைத்திருந்த போதிலும், இன்ப துன்பங்கள் எல்லாம் ஒன்றென்று உணர்ந்திருந்த போதிலும், அன்பு, பரிவு என்கிற இதயப் பண்புகள் ராமனிடத்தில் அபாரமாய்க் காணப்பட்டன என்கிற அரிய விஷயத்தை மேலே சொன்ன செய்யுளில் பார்க்கலாம். கடவுளுக்கே இந்தச் சபலங்கள் இருக்கின்றன என்று சொல்லுவதில் தனியான சோகம்.

இனி ராமனிடம் போகலாம்.

நீர்க் கடன்களையும் அதோடு ஒட்டிய பிற கிரியைகளையும் செய்து முடித்தான். பிறகு ஆற்றங் கரையி லிருந்து மலைச் சரிவில் ஏறித் தன் ஆசிரமத்தை அடைகிறான்.

ஆனவன் பிறவுள
யாவும் ஆற்றிப்,பின்
மானமந் திரத்தவர்
மன்னர் மாதவர்
ஏனையர் பிறர்களும்
சுற்ற ஏகினான்,—
சானகி இருந்தஅச்
சாலை எய்தினான்.

[ஆனவன்: அந்த ராமன்: மான மந்திரத்தவர்: உயர்ந்த பதவியிலுள்ள மந்திரிமார்கள்.]

ஆசிரமத்தை நெருங்கவும் அங்கிருந்து தனியாய் வந்த சிதையைப் பார்த்தான் பரதன். அவன் தங்கி யிருந்த குடிசையையும் நோக்கினான். அவ்வளவுதான்:

எய்திய வேலையின்,
தம்பியன் எய்திய
தையலை நோக்கினன்,
சாலை நோக்கினன்,

கைகளின்கண் மலர்
புடைத்துக், கால்மிசை
ஐயன்அப் பரதன் வீழ்ந்(து)
அரற்றி னான்அரோ.

[எய்திய வேலையில்: ராமன், பரதன் முதலியவர்கள் சாலையை நெருங்கிய மாத்திரத்தில்; தமியன் எய்திய ஐயனை நோக்கினான்: தனியாக (சேடி முதலானவர்கள் இல்லாமல்) எதிர் வந்த சீதையை நோக்கினான்; அப்படியே அவன் இருந்த குடிசையையும் நோக்கினான். உண்டான துயரத்தை அடக்க முடியவில்லை பரதனுக்கு. கைகளால் கண்களை மோதிக் கொண்டான்.]

அவ்விதம் சீதையின் கால்களில் விழுந்து அரற்றிய பரதனை ராமன் கைகளால் தூக்கி நிறுத்தினான்.

அந்நெடும் துயர் உறும்
அரிய வீரனைத்
தன்நெடும் தடக்கையால்
இராமன் தாங்கினான்;

நல்நெடும் கூந்தலை
நோக்கி,—' நாயகன்
என்நெடும் பிரிவினில்
இறந்திட் டான்' என்றான்.

[வீரனை: பரதனை; நல் நெடும் கூந்தலை நோக்கி: அழகிய நீண்ட கூந்தலை உடைய சீதையைப் பார்த்து; நாயகன்: சக்கரவர்த்தியாகிய தந்தை; என் நெடும் பிரிவினில்: என்னை விட்டு நெடுங் காலம் பிரிந்திருக்க வேண்டுமே என்ற காரணத்தினால்.]

சீதை யென்றால், தசரதனுக்குக் கண்ணாயிருந்தவள். லக்ஷ்மி தானே வந்து குடி புகுந்தாள் தன் வீட்டில் என்று எண்ணி, என்ன என்ன அருமை யெல்லாமோ அவளுக்குச் செய்தவன் தசரதன். நாயகன் ராமனுக்கோ தெய்வந்தான். அப்பேர்ப்பட்ட தசரதன் இறந்து விட்டான் என்று கேட்கிறான். எந்த இடத்தில்? ஊரை விட்டு, நாட்டை விட்டுத் தனியாக வந்திருக்கும் காட்டுப் பிரதேசத்தில் கேட்கிறான்! என்ன பாடு படும் அவன் இதயம்? அதை அடுத்த இதழில் பார்க்கலாம்.

# ரோஜாப்பூ

என். சூரியமூர்த்தி

"அம்மா! கார் தயாராய் விட்டது. புறப்பட வேண்டியதுதான்" என்று வேலைக்கார ராமன் 'லேடீஸ் க்ளப்' தலைவியான மிஸஸ் ராமாம்ருதத்தினிடம் கூறினான்.

உடனே அந்த அம்மாள் தன் 'ரிஸ்ட் வாட்'சைப் பார்த்துக் கொண்டார்கள். சுவரில் ஓடும் கடிகாரத்தைப் பார்த்தார்கள். இரண்டும் மணி 5-30 ஆயிற்று என்று காட்டின. உடனே ஆசனத்தை விட்டு எழுந்தார்கள். எழுந்ததும் அந்த அம்மாளுடைய அன்பு மிக்க நாய், 'லொள், லொள்' என்று குரைக்க ஆரம்பித்தது.

மிஸஸ் ராமாம்ருதம் அதைக் கவனியாது தன் வாயில் விரலை வைத்துக் கொண்டு, 'லேடீஸ் க்ளப்'புக்குப் போகுமுன் இன்னும் என்னென்ன எடுத்துக்கொண்டு போகவேண்டும் என்று ஆழ்ந்த யோசனை செய்து கொண்டு இருந்தார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு, வாயிலிருந்த விரல் எடுபட்டது. குரைத்துக் கொண்டிருந்த நாயைப் பார்த்து, "ஏய்! ஜிம்மி! போ, உள்ளே!" என்று அதட்டி விட்டு திரும்பும் சமயம், ராமன் எதிரே நின்றான். அவனைக் கண்டதும் மிஸஸ் ராமாம்ருதம், "அடடா! மறந்தே போய் விட்டேன். அடேய், ராமா! நீ போய் 'ரோஜாப்பூ' வாங்கிக் கொண்டு உடனே ஓடி வா!" என்று தன் 'மணி பர்'ஸைத் திறந்து காசைக் கொடுத்து அனுப்பினார்கள்.

அன்று 'லேடீஸ் க்ளப்'பில் பெண்கள் முன்னேற்றம் என்ற ஓர் அரிய சொற்பொழிவு மிஸஸ் ராமாம்ருதத்தின் தலைமையில் நடைபெற இருந்தது.

மணி ஆறு அடிக்க இன்னும் பத்தே நிமிஷங்கள்தான் இருந்தன.



'ரோஜாப்பூ' வாங்கப் போன ராமன் இன்னும் வந்தபாடில்லை.

மிஸஸ் ராமாம்ருதத்திற்குக் கோபம் கோபமாக வந்தது. அந்தக் கோபம் மூக்கு நுனியில் வந்து நின்ற சமயம் ராமன் வந்து சேர்ந்தான். உடனே அவன் கையிலிருந்த 'ரோஜாப்பூ'வைக் கையில் பிடித்த வண்ணம் ஏதோ யோசனையில் ஆழ்ந்து கொண்டே காரில் ஏறிக் கொண்டார்கள் மிஸஸ் ராமாம்ருதம்.

'டங் டங்' என்று மணி ஆறு அடித்தது. மிஸஸ் ராமாம்ருதம் 'லேடீஸ் க்ளப்'பினுள்ளே நுழைந்தார்கள். கூட்டம் ஆரம்பமாயிற்று. அன்று என்றுமில்லாத ஆர்வத்தோடு பெண்கள் முன்னேற்றத்தைப் பற்றிப் பலர் பேசினார்கள். கடைசியில் தலைவி மிஸஸ் ராமாம்ருதம் "பெண்கள் முன்னேற்ற'த்தைப் பற்றி ஒரு விளாசு விளாசி விட்டார்கள்.

பிரசங்கம் முடிந்ததும், அந்தரங்க சிநேகிதிகளின் சிலர், மிஸஸ் ராமாம்ருதத்தைச் சூழ்ந்துகொண்டு "இன்று உங்கள் பிரசங்கந்தான் ரொம்பப் பிரமாதமாயிருந்தது!" என்று புகழ்ந்தார்கள்.

உடனே மிஸஸ் ராமாம்ருதம் அவர்கள் மேல் ஓர் புன்சிரிப்பை வீசி எறிந்து விட்டு, "அதற்குப் பெருதவியாயிருந்தது இதுதான்!" என்று சொல்லிக் கொண்டே, பெண்களுக்கென்று பிரத்தியேகமாக நடத்தப்படும் வாரப் பத்திரிகையான 'ரோஜாப்பூ'வைத் தன் தோழிகளுக்குக் காட்டினார்கள். அதைப் பார்த்த அங்கிருந்த எல்லாப் பெண்களின் விழிகளும் ஆச்சரியத்தால் அகல விரிந்தன!

# காலக்ஷேபம்

### நல்ல பதில்

குதிரைக்காரன்:—தம்பி, இந்தக் குதிரையைக் கொஞ்சம் பிடிக்கக்கோ. தண்ணீர் குடித்துவிட்டு வருகிறேன்.

பையன்:—நான் மாட்டேன். இழுத்துக் கிட்டு ஓடிவிடும்.

குதிரைக்காரன்:—ஓடாது. பிடிக்கக்கோ.

பையன்:—உதைக்கும்.

குதிரைக்காரன்:—உதைக்காது, ஓடாது ஒன்றும் பண்ணாது தம்பி! பிடிக்கக்கோ!

பையன்:—அவ்வளவு சாதுவான குதிரையைப் பிடித்துக் கொள்வானேன்?

—எம். பி. மாலிம்.

★

### எதிர்பார்த்தல்!

கடன் கொடுத்தவர்:—உங்கப்பா எங்கே? அவரை நான் பார்க்க வேண்டும்.

சிறுவன்:—உங்களைத்தான் அவரும் இது வரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

கடன் கொடுத்தவர்:—அப்படியா? இப்பொழுது இல்லையா?

சிறுவன்:—அவர் இப்பொழுதுதான் உங்களைப் பார்த்துவிட்டு வெளியே போய் விட்டார். —டி. எஸ். குப்புசாமி.

★

### இல்லாத குறை!

தகப்பனார் (வயிற்றெரிச்சலுடன்):—ஏன்டா பத்து ரூபாய்க்கா ஒரு கோட்டுத் தைத்துக் கொள்வது?

பையன்:—நான் என்ன பண்ணுவது அப்பா! அவ்வளவுதான் கையில் பணம் மிஞ்சியிருந்தது. —சரஸ்வதி.

★

### நம்பலாமா?

அவள்:—என்னை மன்னிக்கவேண்டும். நான் உங்களை விவாகம் செய்து கொள்ள முடியாது. ஆனால், உங்களை என் சகோதரன் போல் பாவிக்கத் தயாராயிருக்கிறேன்.

அவன்:—ரொம்ப சரி...அப்பொழுது, உன் தந்தையின் ஆஸ்தியில் எனக்கு ஒரு பங்கு கிடைப்பது நிச்சயந்தானே?...அதை நம்பிக் கொண்டிருக்கலாமா? —என். என்.

★

### நாகரிகம்

கணவன்:—என்ன கறியெல்லாம் ஒரே நாத்தம் அடிக்கிறதே.

மனைவி (நாகரிகமானவள்):—நன்றாயிருக்கு! கறிகாயெல்லாம் சோப்பு போட்டுக் கழுவித் தானே போட்டேன்! —ஜி. ராகவேந்திரன்.

### பள்ளிக்கூடம் எதற்கு?

உபாத்தியாயர் (படிக்காமல் மந்தப் பையன்களுடன் பேசிக்கொண்டிருந்த பாலுவைப் பார்த்து):—ஏன்டா, பாலு! உன்னை எதற்காகப் பள்ளிக்கூடம் அனுப்பி வைக்கிறார்கள் என்று தெரியுமா?

பாலு:—தெரியும், ஸார்! வீட்டில் உபத்திரவம் செய்யாமலிருப்பதற்காக! —ஜி. வி. ராஜன்.

★

### தெரியாத விஷயம்

டாக்டர்:—எந்த விஷயமாயிருந்தாலும் நான் என் மனைவியிடம் ஒளிப்பதே கிடையாது; அவளும் எதையும் வெளியில் சொல்வதே கிடையாது!

நண்பர்:—அப்படியா? சமீபத்தில் யாருக்கோ பொய் 'ஸர்டிபிகேட்' கொடுத்ததற்காக நீங்கள் ஐம்பது ரூபாய் அபராதம் செலுத்த நேர்ந்ததாமே?

டாக்டர்:—உங்களுக்கு யார் சொன்னார்கள்? அந்த விஷயம் என் மனைவியைத் தவிர வேறு யாருக்கும் தெரியாதே!

நண்பர்:—என் மனைவி சொன்னாள்!

—பாப்பா.

★

### யாரை எழுப்புவது?

மனைவி (புதிதாக வந்தவள்):—உங்களைத் தினம் காலையில் எத்தனை மணிக்கு எழுப்ப வேண்டும்.

புருஷன்:—நீ என்னை எழுப்ப வேண்டாம். நான் தினம் காலையில் ஆறுமணிக்கே எழுந்து விடுவேன்.

மனைவி:—அப்படியானால் நீங்கள் எழுந்ததும் என்னைச் சற்று எழுப்பி விடுகிறீர்களா?

—எஸ். ஜி. ராஜன்.

★

### அவசியமில்லை

"உன் நண்பனுடன் ஒருவன் சண்டை செய்யும்போது நீ சும்மா பார்த்துக் கொண்டிருந்தாயாமே?"

"நான் உதவி செய்யவேண்டிய அவசியமே இருக்கவில்லை. நண்பன் சக்கைபோடு போட்டுக் கொண்டிருந்தான்."

—ராஜலக்ஷ்மி சந்திரசேகர்.

★

### கவலை வேண்டாம்!

ஒருவர்:—ஸார்! தயவு செய்து என் மகனுக்குக் கல்யாணத்திற்காகவாவது 'ஸெலக்ஷன்' கொடுங்கோ.

ஹெட்மாஸ்டர்:—அதைப்பற்றி உங்களுக்குக் கவலை வேண்டாம். அவனுக்கு வயது 22 ஆகிவிட்டதால் அதற்கு ஸெலக்ஷன் ஆய் விட்டதே! —எம். ஆர். ரத்தினவேலு.

★

### புத்திசாலி

எஜமானன்:—டேய், நம் மகளின் கல்யாணச் சீட்டைத் தெரிந்தவர்கள் வீட்டிற்கெல்லாம் கொண்டு கொடுத்துவிட்டு வா.

வேலைக்காரன்:—நான் ஏன் கொண்டுபோய்க் கொடுக்க வேண்டும் சாமி? அவர்களெல்லாம் நம் வீட்டுக்குக் கல்யாணத்திற்கு வரும்போது கொடுத்துவிட்டால் போகிறது!

—டி. வி. சுந்தரராஜன்.

# சமாதானமாய் வருகிறது!

**நாடோடி**

இந்தப் பொல்லாத ரஷ்யர்கள் பெர்லினை நோக்கி இப்படித் திடு, திடென்று முன்னேறிக் கொண்டு வந்தாலும் வருகிறார்கள், திடுதிப்பென்று யாரையும், கேட்காமல், சொல்லாமல் சமாதானம் வந்து விடும்போலிருக்கிறது.

சமாதானம் வரட்டும். பேஷாக வரட்டும். நான் வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் நாம் சமாதானத்துக்குத் தயார் பண்ணிக் கொள்வதற்கு முன் அது வந்து தொலைந்துவிடப் போகிறதோ என்று தான் பயமாய் இருக்கிறது.

ஆம், யுத்தத்துக்குத் தயார் பண்ணிக் கொள்வது எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் சமாதானத்துக்குத் தயார் பண்ணிக் கொள்வதும். பார்க்கப் போனால் யுத்தத்துக்குத் தயார் பண்ணிக் கொள்வதைவிடச் சமாதானத்துக்குத் தயார் பண்ணிக் கொள்வது, அதிக முக்கியம், அதிகக் கஷ்டம் என்று சொல்லவேண்டும்.

உதாரணத்துக்கு வெகு தூரம் போக வேண்டாம். வீட்டில் அடிக்கடி சகதர்மிணியுடன் யுத்தம் நடத்திக் கொண்டு, பின் சமாதான உடன்படிக்கை செய்து கொள்ளும் நபர்களைக் கேட்டாலே சொல்வார்கள், சமாதானத்துக்குத் தயார் பண்ணிக் கொள்வது எவ்வளவு முக்கியம், எவ்வளவு கஷ்டம் என்று.

சாதாரண வீட்டு யுத்தத்துக்கே, சமாதானத்துக்குத் தயார் பண்ணிக் கொள்வது இத்தனை முக்கியமென்றால் உலக யுத்தத்துக்கு எத்தனை முக்கியம் என்பதை நான் சொல்லாமலே ஊகித்துக் கொண்டிருப்பீர்கள்.

ஆனால் நாம் இன்று காணும் நிலைமை என்ன? யுத்தத்துக்கு எவ்வளவு தயாராக இருந்தோமோ, (அதாவது எப்படித் தயாராக இல்லையோ) அவ்வளவு சமாதானத்துக்கும் தயாராக இருக்கிறோம் (அதாவது தயாராக இல்லை.)

இந்த நிலையில்தான் ரஷ்யர்கள் யாரையும் கேட்காமல் சொல்லாமல் யுத்தத்தை முடிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை வெகு துரிதமாகச் செய்து கொண்டு போகிறார்கள்.

ரஷ்யர்களை முந்திக் கொண்டு நாம் நம்மைச் சமாதானத்துக்குத் தயார்ப் படுத்திக் கொண்டால்தான் பிழைத்தோம். இல்லாவிடில் மிகவும் திண்டாடிப் போய்விடுவோம்.

"திண்டாட்டமா? என்ன திண்டாட்டம்?" என்று நீங்கள் கேட்கலாம்.

ஒரே ஒரு உதாரணம் சொல்லுகிறேன், கேளுங்கள். நான் இப்பொழுதெல்லாம் என் பெண் அனுவுக்காகப் பால் புட்டி வாங்கும் அழகைச் சற்று உங்களுக்குச் சொன்னால் நீங்கள் சமாதானம் வந்தால் நாம் எவ்வளவு திண்டாடிப்போய் விடுவோம் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.

அனுவுக்குப் பால் புட்டி வாங்கிக் கொண்டு வரவேண்டும் என்பதை நினைக்கும் போதெல்லாம் எனக்குத் திடீரென்று தலைவலியும் காய்ச்சலும் வந்துவிடும். அதாவது தலைவலியும் காய்ச்சலும் வந்து விட்டதாகக் காரியாலயத்துக்கு லீவ் எழுதிப் போட்டு விடுவேன்.

என்னைப் போலவே குழந்தையை வைத்துக் கொண்டு பால் புட்டிக்காக அலைகிற அநேகருக்கு இம்மாதிரி நடுவில் தலைவலியும், காய்ச்சலும் வருவதை நான் கண்டிருக்கிறேன். சில சமயங்களில் இதற்காக அவர்கள் பாட்டிகளும் செத்துப் போவதுண்டு. (இந்த லீவு வாங்கிக் கொடுக்கும் விஷயத்தில் இந்தப் பாட்டிகள் தங்கள் பேரன்களுக்காகச் செய்துகொண்டிருக்கும் இம்மாபெரும் தியாகத்தை எவ்வளவு பாராட்டினாலும் போதாது. இதற்காக இவர்களுக்கு ஒரு ஞாபகார்த்த நிதி திரட்டிச் சிலை ஒன்றில்

இவர்களைப் பிரதிஷ்டை செய்தாலும் தகும்.)

பால் புட்டிக்காகக் கடை, கடையாக ஏறி இறங்க வேண்டும், அதற்கு ஒரு நாள் முழுவதும் வேண்டும், அப்படி அலைந்தாலும் அது கிடைக்காது என்று அனுபவப் பட்டவர்களுக்குத் தான் தெரியும். கடையில் இருப்பவர்கள் எல்லாம் அபெரியின் சிஷ்யர்கள். குரு பாடும் 'இல்லை'ப் பாட்டைத்தான் அவர்களும் பாடுவார்கள் என்று எதிர் பார்த்துக் கொண்டே தான் கடையில் நுழைவோம். அவர்களும் நம்மைத் துளிக்கூட ஏமாற்றுவதில்லை. (அதாவது எதிர்பார்த்ததற்கு விரோதமாக நடந்து நம் மனதை உடைக்காமல்) இல்லையென்றே சொல்லுகிறார்கள்.

இந்த நிலையில் சமாதானம் வந்ததென்று வைத்துக் கொள்ளுங்கள். திடீரென்று "இல்லை, இல்லை" என்றே பதில் வந்து வழக்கப்பட்ட இடத்திலிருந்து 'இருக்கிறது' என்று வந்தால் நாம் மூர்ச்சை போட்டு விழுவோமா, மாட்டோமா!

அத்தகைய விபரீதம் நேராமல் பார்த்துக் கொள்வதற்காகத்தான் நாம் சமாதானத்துக்கு நம்மைத் தயார்ப்படுத்திக் கொள்ளவேண்டும் என்கிறேன். யுத்தம் முடிகிற சமயம் பார்த்து நம்மை அவசரம் அவசரமாக யுத்தத்துக்குத் தயார்ப்படுத்திக்கொண்டிருக்கும் சர்க்கார் நம்மைச் சமாதானத்துக்குத் தயார்ப் படுத்தினார்களானால் எவ்வளவோ உபகாரமாக இருக்கும்.

இந்தப் பால் புட்டி விஷயத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். "பால் புட்டி இருக்கிறது" என்று கடைக்காரன் சொன்னவுடனும் நாம் மூர்ச்சை போட்டு விழாமல் இருப்பதைத் தடுக்கச் சர்க்கார் ஒரு வழி செய்யலாம். இப்பொழுதே முதற்கொண்டு நடுவில், நடுவில் ஏதாவது ஒரு நாள் எல்லாக் கடைகளிலும் பால் புட்டிகள் கிடைக்கும்படி செய்யலாம். இதுமாதிரி இது வரை கடைக்காரர்கள் "இல்லை, இல்லை" என்று சொல்லி வந்த எல்லாச் சாமான்கள் விஷயமாகவும் செய்யலாம்.

இது முடியாவிட்டால் சர்க்கார் இன்னொரு உபகாரமாவது செய்யலாம். அதாவது ஒவ்வொரு கடைக்காரரும் இப்பொழுது முதற்கொண்டே மூர்ச்சை தெளிய வைப்பதற்கு வேண்டிய மருந்துகள் தம்மிடம் வைத்துக் கொள்ள வேண்டும் என்று உத்தரவு போடலாம். இன்னும் அங்கங்கே இதற்கென்றே வைத்தியர்களை நியமிக்கலாம்.

## நடுத்தெருவில்



நடுத்தெருவில் ஒருவன் கழுத்தை இன்னொருவன் பிடித்திழுப்பதைப் பார்த்து.



ஒரு போலீஸ்காரன் விசிலை எடுத்து ஊத,



இன்னும் அநேக போலீஸ்காரர்கள் வர.



கடைசியில் விஷயம் என்னவென்று விசாரித்ததில், ஒருவன் இன்னொருவனை வீட்டுக்குச் சாப்பிட வரும்படி வற்புறுத்திக் கொண்டிருந்தான் என்று தெரிந்தது!

சமாதானம் வந்ததும், டிராம்களிலும், பஸ்களிலும் கூட்டம் குறைந்துவிடும். எல்லாரும் உட்கார்ந்து வர இடம் கிடைத்துவிடும். ஆனால் ஜனங்கள் உட்காருவார்களா? மாட்டார்கள். இத்தனை நாளும் நின்று நின்றே பிரயாணம் செய்து பழகிப்போன அவர்கள் கால்களுக்கு, உட்காருவது என்றால் எப்படி என்பதே மறந்து போயிருக்கும். அந்த வித்தையைச் சர்க்கார் இப்பொழுது முதற்கொண்டே பொது ஜனங்களுக்குச் சொல்லிக் கொடுத்தால்தான் ஜனங்கள் நாளைக்குச் சமாதானம் வந்ததும் பஸ்களிலும், டிராம்களிலும் உட்கார்ந்து வருவார்கள். இல்லாவிடில் நாம் அங்கு காணும் காட்சி பள்ளிக்கூடங்களில் சில வகுப்புகளில் நாம் காணும் காட்சியைவிட ஆச்சரியமாக இருக்கும்.

நான் பள்ளிக்கூடத்தில் வாசித்துக் கொண்டிருந்த காலையில் இரண்டாவது பாரம் உபாத்தியாயர் ஒருவர் இருந்தார். மிகக் கடுமையான பேர்வழி. பாடம் படிக்காமல் வந்தாலும் சரி, பள்ளிக்கூடத்துக்கு நாழி கழித்து வந்தாலும் சரி, புஸ்தகம் கொண்டுவர மறந்தாலும் சரி, பக்கத்துப் பையனோடு பேசினாலும் சரி, பக்கத்துப் பையனை நாம் அடித்தாலும் சரி, அல்லது அவன் நம்மை அடித்தாலும் சரி, எதற்கெடுத்தாலும் எழுந்து நிற்க வேண்டும். நல்லவேளையாக நெட்டைப் பனைமரம் போல் பெஞ்சி மீது நிற்கச் சொல்ல மாட்டார்.

மேலே சொன்ன குற்றங்களில் ஏதாவது ஒன்றில் ஒவ்வொரு நாளும் அகப்பட்டுத்தான் ஆகவேண்டுமாதலால், வகுப்பில் கிட்டத்தட்ட எல்லாப் பையன்களுமே எப்பொழுது பார்த்தாலும் நின்று கொண்டிருப்பார்கள்.

பொது ஜனங்கள் பஸ்களில் உட்கார்ந்து பிரயாணம் செய்யும் வழக்கத்தைச் சர்க்கார் இப்பொழுது முதற்கொண்டே கற்றுக் கொடுக்காவிட்டால், பின்னால் பஸ்களில் மேற் சொன்னது போன்ற வேடிக்கைக் காட்சிகளைத்தான் காணவேண்டியிருக்கும்.

இன்னும் யுத்தம் தான் போகும்போது யுத்தப்படியையும் தன்கூடவே அழைத்துக் கொண்டு போய்விடலாம். அப்பொழுது ஜனங்கள், "சம்பளம் கொடுக்காவிட்டாலும் பரவாயில்லை. யுத்தப்படி கொடுங்கள்" என்று கேட்பார்கள். ஏனெனில் அநேக இடங்களில் சம்பளம் என்று கிடைக்கும் தொகையைவிட யுத்தப்படி என்று கிடைக்கும் தொகைதான் அதிகமாக இருக்கிறது. ஆனால் முதலாளிகள், "அதெல்லாம் முடியாது. சம்பளம்தான் கொடுப்பேன். இன்னும் கொஞ்சம் அதிகச் சம்பளம் கொடுத்தாலும் கொடுப்பேனேயொழிய, யுத்தப்படி கொடுக்க மாட்டேன்" என்று வாதாடலாம்.

ஆகவே, தங்கள் சம்பளத்துக்குள் குடித்தனத்தை நடத்துவதற்கு சர்க்கார் ஜனங்களுக்கு இப்பொழுது முதற்கொண்டே பயிற்சி அளிக்க வேண்டும். இல்லையேல் ஜனங்கள் யுத்தப்படிக்குப் பதில் 'சமாதானப் படி' வேண்டும் என்று கேட்கத் தொடங்கி விடுவார்கள்!

ஆக, இந்த மாதிரி எத்தனையோ விஷயங்களில் நாம் இன்னும் சமாதானத்துக்குத் தயாராக இல்லை. ஆகவே சர்க்கார் இன்று நம்மை இப்பொழுதே சமாதானத்திற்குத் தயார்ப்படுத்த ஆரம்பிக்கட்டும். இல்லையேல், சர்க்கார் இதற்கென்று ஒரு நிபுணரைத் தருவித்து, கமிஷன் ஏற்படுத்தி, அவர்கள் ஊர் சுற்றி, அறிக்கை தயாரித்து, பிறகு அதன் மீது தாங்கள் நடவடிக்கைகள் எடுக்கும் வரை ரஷ்யர்கள் சமாதானத்தைக் கொண்டுவந்து விடக்கூடாது என்று கேட்டுக் கொள்ளட்டும்!

## சிவராத்திரியில் — தமிழிசை பஜனை

இந்த வருஷம் மகா சிவராத்திரி மயிலாப்பூரில் தனி விசேஷம் பெற்றிருக்கும். 11-2-45 ஞாயிற்றுக்கிழமை யன்று இரவு 9 மணி முதல் 12 மணி வரை, திருமயிலை கபாலீசுவரர் நான்கு வீதியிலும் பாபநாசம் சிவன் அவர்கள் பஜனைத் தொண்டு செய்வார்கள். எல்லாம் தமிழ்ப் பாட்டுகளாகவே பாடுவார்கள். சிவ பக்தர்களும் தமிழிசை அன்பர்களும் பெருந்திரளாக மேற்படி பஜனை கோஷ்டியில் சேர்ந்து சிவானந்தத்தையும் இசை யின்பத்தையும் ஒருங்கே அடைந்து மகிழ்வார்களாக!






வினோலியா உபயோகித்து ஸ்நானம் செய்தால் குளிர்ச்சி உண்டாகும் போது நீங்கள் ஏன் வெப்பத்தினால் கஷ்டப்பட வேண்டும். இந்த சோப்பின் வெண்ணிறம் வாய்ந்த நுரை உங்களை சுத்தமாக்கும் பொழுது ஏன் வியர்வையுடன் இருக்கவேண்டும். வினோலியா சோப்பின் வாசனை சுறுசுறுப்பையும், உத்ஸாகத்தையும் உண்டுபண்ணி, மனதிற்கு சுகத்தையும் அளிக்கிறது.

# வினோலியா
## ஒயிட் ரோஸ் ஸோப்பு




VWR. 17-60 TM — VINOLIA CO. LIMITED, LONDON, ENGLAND



# சிக்கிமில் — தேநீர் அருந்தும் நேரம்

சிக்கிமில் உள்ள லெப்சாஸ்களுக்குத் தேநீர் அருந்தும் வழக்கம் மிகவும் பழமையானது. தேநீர் வினியோகித்தல் என்னும் சடங்கு இன்னும் இங்கே ஏழைகளிடையே கூட அனுசரிக்கப் படுகிறது. சீனாவைப்போல இது அவ்வளவு சம்பிரதாயமாய் இல்லாதபோதிலுங்கூட இரண்டறக்கலந்த உள்ளடங்கிய கொள்கை ஒன்றேதான்.

தேநீர் பருக ஒவ்வொருவருக்கும் தனித் தனிப் பாத்திரம் உண்டு. எனினும், இங்குள்ளவர்கள் தேநீரைக் கொதிக்க வைத்து ஒரு பெரிய பாத்திரத்தில் பால் சீனியுடன் மொத்தமாய்க் கலந்து வைத்துக் கொள்கிறார்கள். பின் அதிலிருந்து ஓர் அகன்ற கரை அகப்பையினால் எடுத்து எல்லோருக்கும் வழங்குகிறார்கள்.

சிக்கிம், பள்ளத்தாக்குகள், அணைகள் செங்குத்தான குன்றுகள் நிறைந்த மலைப் பிரதேசம் அல்லவா? அதனால், அங்கு வசிப்பவர்கள் சீதோஷ்ண நிலையின் பலவிதமான மாறுதல்களுக்கு உட்படுகிறார்கள். அங்கே, அநேகமாய் எப்பொழுதும் குளிர்தான் அதிகமாய் இருக்கும். வீட்டுக்குள்ளேயே அலுவல் உள்ளவர்களுக்குத் தங்களைக் கதகதவென்று வைத்துக்கொள்ளத் தேநீர் வேண்டியிருக்கிறது. வெளியே வேலை செய்பவர்களுக்கோ தங்கள் தாகத்தைத் தணித்துக்கொள்ளத் தேநீர் அவசியமாய் இருக்கிறது.

எப்பொழுதும் புத்தம் புதிய ப்ரூக்பாண்ட் தேயிலை கிடைக்கும் இந்தியாவின் எட்டாக் கையிலுள்ள பிரதேசங்களில் சிக்கிமும் ஒன்று.

# ப்ரூக் பாண்ட்

"இரு இலையும் ஒரு மொட்டும்"



தணிக்கையாளர் சொல்லுகிறார் . . .

“அழுக்கடைந்த ஆடைகளிலிருந்து அழுக்கைத் தானாகவே போக்கி விடுவதால் சுயமாக வெளுக்கும் சக்தி வாய்ந்ததென்று இதை சோப் செய்யும் ரசாயன சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். அதில் வெளுக்கும் ‘சக்தி’ அதிகமாக உள்ளதென்றும் சொல்லுகிறார்கள். ஸன்லைட் சோப்பின் நுரையை ஆடைகளுக்கு இட்டால் அது வெளுக்கும் வேலையை நமக்கு சிரமம் கொடுக்காமல் செய்து விடுகிறது. என்னுடைய சம்சாரமும், தாயாரும் எனக்கு இதை அநேக தடவை சொல்லி இருக்கிறார்கள்.”

# ஸன்லைட் சோப்

## சுயமாக வெளுக்கும் நுரை உடையது




இப்பொழுது மெழுகுத் தாளினுள் சுற்றப்பட்டு விற்கப்படுகிறது

S. 48-33 TM

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு




# சிறந்ததை விரும்பும் சகலருக்கும்

நறுமணம் கமழும் சிகரெட்டை விரும்புவோர் டிலக்ஸ் டெனுரை வரவேற்பார்கள். சிகரெட்டின் நறுமணத்தின் உயர்நிலையை டெனுர் சிகரெட் அடைந்திருக்கிறதென அதை உபயோகிப்பவர்களால் கருதப்படுகிறது. உத்தரவாதமுள்ள 100% பொருக்கின வர்ஜீனியா புகையிலை இந்த சிகரெட்டுகள் செய்வதில் உபயோகப்படுவதே இதை எல்லாரும் விரும்புவதற்கு முக்கிய காரணம்.

**டி லக்ஸ் டெனுர் சிகரெட்டு**

**ஜேம்ஸ் கார்ல்டன் லிட். லண்டன்**

# Tenor

**Is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD. LONDON.

Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press.
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.